உ

# கம்பராமாயணம்

## அருஞ் சொல்லகராதி

### மாதிரிப் பிரதி

பக்கங்கள் 1—76

அகரத்தை முதலெழுத்தாகக் கொண்ட சொற்கள்








தொகுப்பாசிரியர் :

முன்னாள், இலங்கை இராமநாதன் கல்லூரி ஆசிரியர்

அ. சே. சுந்தரராஜன், B. A.,

73-A, கீழ வீதி,

சிதம்பரம், தென்னிந்தியா.

உ

ஸ்ரீராமஜெயம்

# கம்பராமாயணம்

# அருஞ்சொல்லகராதி

## மாதிரிப் பிரதி

பக்கங்கள் 1—76

அகரத்தை முதலெழுத்தாகக் கொண்ட சொற்கள்

தொகுப்பாசிரியர் :

முன்னுள், இலங்கை இராமநாதன் கல்லூரி ஆசிரியர்

அ. சே. சுந்தரராஜன், B. A.,

73-A, கீழ வீதி,

சிதம்பரம், தென்னிந்தியா.

 [December 1967.

உ

ஸ்ரீராமஜெயம்.

# கம்ப ராமாயணம்

## அருஞ் சொல்லகராதி

---

அ – 1. உலகறி சுட்டு. நிறை இரும் பல்பகல் நிருதர் நீள் நகர்ச் சிறையிருந்தேனை அப் புனிதன் தீண்டுமோ. (சு : 699) [பா. பே]
2. சேய்மைச் சுட்டு. அவ்விடம் ...... சரவணம் என்பதுந் தெரிந் தான். (பா : 507) (பா : 98)
3. பண்டறி சுட்டு. அவ்விந்திரன் காதல். (சு : 358) (யுத் : 3581)

அஃகுதல் – 1. சுருங்குதல்; குறைதல். அஃகலில் அறநெறி. (அ : 899) அருள் வரச் சிற்றம் அஃகா. (கி : 615)
2. கழிதல். அல்லாயிரமாயிரம் அஃகினவால். (யுத் : 1745)

அஃது – 1. முந்தியதைச் சுட்டி நிற்பது. அஃது–அவ்வினுவிற்கு. (அண்) (வை. மு) அப்படியே. (கலா) (பா : 315)
2. அது ; அச் செயல். தவமுனக் கஃதே. (கி : 154) [பா : பே] (சு : 1150) (கி : 815) (கி : 156)

அக்கட – அதிசயத்தை உணர்த்தும் திசைச்சொல். அக்கட இராவணற் கமைந்த ஆற்றலே. (யுத் : 44)

அக்கணம் – அந்தக்கணம். கணம் – கால நுட்பம். அக்கணம் உவரி மீளும் அகன் மழை. (அ : 1049) (ஆ : 319)

அக்கரை – 1. மறு கரை. அக்கரை அணைந்தார். (அ : 727) (அ : 1049)
2. எல்லை. அழுந்து துன்பினுக் கக்கரை கண்டனன். (கி : 149)

அக்கன் – அட்சகுமாரன். இந்திரசித்துக்கு இளையவன். (யுத் : 522)

அக்குரோணி – படையளவு. 21,780 தேர், 21,780 யானை, 68,610 குதிரை, 103,350 காலாள் உடையது ஓர் அக்குரோணி. அக்ஷௌஹிணி என்னும் வட சொல் அக்குரோணி எனச் சிதைந்தது. ஆன்றவர் உணர்த்திய அக்குரோணிகள் மூன்று பத்தாயிரத்திரட்டி முற்றுமே. (அ : 997) (அ : 1054)

அக்குவடம் - எலும்பு மாலை. அக்குவடம் முத்தமணி யாரமதன் நேர்நின்று ஒக்குமெனின். (கி : 868)

அகடு – 1. நடுப்பாகம். பொய்து அகடு ஒன்று பொருத்தி. (உ. வி) (சு : 911)
2. வயிறு. கல்லைக் கிடந்து அகடு வெந்து (அ : 731)

**அகண்டம்** - முழுமையும். அண்டமும் முற்றும் அகண்டமும் மேனுள் உண்டவன். (பா : 444)

**அகணி** – உள்ளிடம். அக்கணத் தப்பிலத்து அகணி எய்தினர். (கி : 844)

**அகணி நாடு** – மருத நிலங்களையுடைய நாடு. அசன அப்புலத்து அகணி நாடு ஒரீஇ. (கி : 905)

**அகத்தியல்** - மனத்தின் எண்ணம். அழிந்தது பிறவி என்னும் அகத்தியல் முகத்திற் காட்ட. (யுத் : 444)

**அகத்துட் கொள்ளல்** – மனத்தில் நினைத்தல். அருந்தவமுடைய ரம்மா அரக்கரென்று அகத்துட் கொண்டான். (யுத் : 445)

**அகத்துறை** - அகப் பொருளிலக்கணத்துறைவகை: உள்ளே யுள்ள நீர்த்துறைகள். அவி அகத்துறைகள் தாங்கி ஐந்திணை நெறியளாவி. (ஆ : 225)

**அகநகர்** - நகரத்தின் உட்புறம். அன்னதன்மை அகநகர் நோக்கினன். (அ : 828)

**அகப்படுதல்** - சிக்குதல். அலகிலா அரக்கர் சேனை அகப்பட. (யுத் : 919)

**அகப்பொருள்** – உள்ளுறைப் பொருள். அவி கொள் நான் மறை அகப் பொருள் புறப் பொருள் அறிவார். (யுத் : 162)

**அகம்** – 1. மனம். அகநிறையருள் மிக்கான். (அ : 675) தன் அகத்துறை அழகன். (சு : 197) (சு : 479)

2. மன நினைவு. (அண்)

3. உள்; உட்புறம். (கலா)

4. அகத்தவர். பரமபதத்திலுள்ள நித்திய சூரிகள். (வை. மு) புறங்காண அகங்காண. (ஆ : 50)

5. உறைவிடம்; வீடு. பொற்பகம் மானநீர் இலங்கைப் பொன்னகர். (ஆ : 855)

6. பாவம். (இலக்) கரு நிறமான இருள். (உ. வி)

7. இருளாகிய மரம். (உ. வி)

8. பாவமாகிய மரம். (உ. வி) அகம் வேரற்றுக வீசருக்கனர். (கி : 406)

9. மார்பு. மொய்யமர் அகங்களைக்கிழித்து. (யுத் : 1107)

**அகம்பன்** - 1. போரிற் சலனமில்லாதவன். கரன் படைவீரருள் ஒருவன். புள்ளின் நூல் தெரிந்தவன். (ஆ : 436)

2. இராவணன் துணைவருள் ஒருவன். (யுத் : 494) (யுத் : 1692) (யுத் : 2488)

அகம்பாடு - 1. உள்வீடு. (கலா)
2. மனத்திற்படிந்த வடிவம். விஞ்சையின் அகம்பாடுணர்ந்து (பா : 1240)

**அகம்புலர்தல்** - மனம் வருந்துதல். அகம் புலர்ந்து. (ஆ : 951)

**அகம் பொருமுதல்** - மனங் கலங்குதல் ; உள்ளம் விம்மலுறுதல். ஆயாவுயிர்த்து அகம் பொருமினன் பன்முறை புலம்பினனரோ. (அ : 1124)

**அகமலர்தல்** - மனமகிழ்தல். திரிகின்ற உள்ளத்தானும் அக மலர்ந்தவன் முன் சென்றான். (யுத் : 428)

**அகர்** - அகில். அகரும் நன்னெடுஞ் சாந்தமும். (சு : 1211)

**அகரு தூபம்** - அகிற் புகை. அகரு தூபத்தின் அழுந்தின முகிற் குல மனைத்தும். (சு : 124)

**அகல்** - 1. விளக்கேற்றும் அகல் ; விளக்கு. கருங்கடல் காரகல் கடுப்ப. (யுத் : 561)
2. அகன்ற. அகல் அரும் பரவை நாண (சு : 5)

**அகல்கை** - அகலுதல். இதன் ஆணையை அவமதித்து அகல்கை ஏய்ந்ததன்று. (சு : 1038)

**அகல்மதி** - பூரண சந்திரன். பருவநாளின் அகல்மதிக் குவமை யாயின கொலோ. (யுத் : 105)

**அகலங்கள்** - மார்புகள். சுடர்க்கணைதான் தாரோடகலங்கள் தடிந்திடினும். (யுத் : 455)

**அகல நீத்தல்** - அப்பால் எறிதல். கலன்கழித்து அகலநீத்தார். (பா : 1102)

**அகலப்போதல்** - வழிவிட்டு விலகுதல். ஆடவர் அகலப்போவார். (பா : 872)

**அகலம்** - 1. மார்பு. தாரகலத்தண்ணல். (யுத் : 1952)
2. சுற்றளவு. (கலா) விஸ்தாரம். (வை. மு) விஸ்தீரணம். (உ. வி) ஏழு நூறு யோசனை அகலமீட்டு. (யுத் : 479)

**அகலிடம்** - 1. மார்பு. (கலா) (வை. மு)
2. பரந்த இடம். (அண்)
அணைக்க நங்கைக்கு அகலிட மில்லென்றார். (பா : 848)
3. பரந்த இடத்தையுடைய நிலவுலகம். அகலிடத்தை நெடுங் காலம் அளித்திர். (அ : 1058) அகலிடம் நெளிய நடந்தார். (சு : 765)

**அகலுதல்** - இடம் விட்டுப் பெயர்தல். தீபமூற்றவும் நீத்து அகன்றென. (அ : 246)

**அகவிருள்** - உள்ளத்திலுள்ள இருள். புலவோர் அகவிருள் தானகல. (பாயி : 2)

அகவிரை நறுமலர் - வாசனையை உள்ளேயுடைய நல்ல கற்பக மலர். வானுளோர் அகவிரை நறுமலர் தூவி ஆர்த்தெழ. (பா:266)

அகவு காதல் - தழைத்த பக்தி, அகவு காதலால் அனுமன் மகவு கொண்டு போய் மரம் புகும் மந்தியை ஒத்தான். (யுத் : 1175)

அகவுதல் - 1. ஆடுதல். அகவும் இளமயில்கள். (அ : 544) அருகுவர் தகவ. (சு : 419)

2. அசைதல். தெழிக்குமேல் அகவும் நாவ. (யுத் : 2019)

3. நீடுதல்; தழைத்தல். அகவுகாதல். (யுத் : 1175)

அகழ் - அகழி. இட்டவனை இட்ட அகழிற் கடிதின் இட்டான். (யுத் : 854) (யுத் : 972)

அகழ்தல் - தோண்டுதல். ஆர்கலி அகழ்ந்தோர். (அ : 277)

அகழி - கோட்டையைச் சூழ்ந்துள்ள கிடங்கு. ஆழிமால்வரையை அலைகடல் சூழ்ந்தன அகழி. (பா : 106)

அகற்றி - கழித்து. இந்திரன் பதியிடைப் பகற்பொழுது அகற்றி. (யுத் : 135)

அகறல் - செல்லுதல். சிறுத்தொழில் முடித்தகறல் தீதெனல் தெரிந்தான். (சு : 691)

அகறி - அகல்தி ; ஓடுகிறாய். மீடி எங்கு அகறி. (ஆ : 21)

அகன் - மனம். அகனுறப் பொலிந்த வள்ளல். (யுத் : 719) (யுத்:452)

அகன் குளம் - ஏரி. அலர்ந்த பைங்கூழ் அகன் குளக் கீழன (அ:815)

அகன் புனல் - பரந்த நீர். அகன் புனலாடி அம்மலர் சூடவும். (பா : 158)

அகனமர் காதல் - மனத்துப் பொருந்திய விருப்பம். அகனமர் காதல் ஐய. (யுத் : 452)

அகாரம் - மாளிகை. (அண்) பாகாய செஞ்சொலவர் வீசு பட காரம். (வீசுபடு அகாரம்) (சு: 98)

அகில் - அகரு மரம். கூந்தல் உலர்த்துவதற்குப் புகையிடப்படும் ஒரு வாசனைப் பொருள். கள்ளியின் தாய் பிளந்துக்க காரகில் களும். (பா : 349) காழகில். (கி: 233)

அகில நற்றனம் - நல்ல பூமி தானங்கள். அன்ன தானம் அகில நற்றனங்கள். (பாயி: 17)

அகிலம் - உலகங்கள். (கலா) சராசரங்களெல்லாம். (அண்) அண்டமும் அகிலமும் அறிவரு நெறியால் உண்டவன். (ஆ : 117)

அகிற்சேறு - அகிற் குழம்பு. (பா : 19)

அகிற்றேய்வை - அகிற்கட்டைத் தேய்வினாலாகிய குழம்பு. (பா : 1126)

**அங்கணம்** - சாக்கடை. அங்கணத் தழுக்குத் தின்னும் நரி. (யுத்: 1649)

**அங்கணன்** - அழகிய கண்ணோட்டமுடையவன்; இராமபிரான். (அ. 737)

**அங்கணுயகன்** - அழகிய கண்ணையுடைய நாயகன்; இராம பிரான். அங்கணுயகற் காணவந்தண்மினுர். (அ: 627)

**அங்கதம்** - 1. தோள்வளை; வாகுவலயம். அங்கதங்களும் அம்பும் இலங்கிட. (யுத்: 3172) (யுத்: 3381)

2. அம் கதம். அழகிய கோபம். அம்கதம் களத்து அழிவுற்ற வால். (யுத்: 3381)

3. குற்றம்; பழிச்சொல். அங்கதமில்லாத கொற்றம். (யுத் :4338)

4. வசைப்பாட்டு. ஆற்றல் நன்னெடுங் கவிஞன் ஓர் அங்கத முரைப்ப. யுத்: 1211)

**அங்கதன்** - வாலி மகன். (கி: 510)

**அங்கந்தருதல்** - உடம்பைக்கொண்டு போரில் முன்னிற்றல்; புறங்கொடாது முன்னிற்றல். அங்கந்தர அஞ்சி. (யுத்: 1963)

**அங்கம்** - 1. உடல். அங்கமும் மனமதென்னக் குளிர்ந்தது. (யுத்: 431)

2 உறுப்பு. வெங்கண் அங்கவலயங்களும் விலங்க. (ஆ: 16)

3. போர். தாபதர் தம்மோடு எம்மோடு அங்கம் வந்துற்றதாக அமரர் வந்துற்ருரன்றே. (யுத்: 1233)

**அங்கர்** - யக்கர். யக்ஷர் என்ற வடசொல் யக்கர், அக்கர், அங்கர் என முறையே திரிந்து வரும். (வை. மு) அரசர்க்குரிய படையுறுப்பினர். (கலா) சொல்லில் அங்கர் சதகோடி தொடர்ந் தோர். (யுத்: 815)

**அங்கரக்கர்** - அங்கரட்சகர்; மெய்காப்பாளர் அங்கரக்கர் சதகோடி அமைந்தோர். (யுத்: 814)

**அங்கவலயம்** - உறுப்போடு கூடிய வளை. அங்கத்திலே அணிதற்குரிய வளை. (ஆ: 16)

**அங்கனையாள்** - பெண் அங்கநா என்பதன் திரிபு. சிறப்பு நோக்கி ஆள் விகுதி சேர்க்கப்பட்டது. (கலா) ஆண்டங்கனை யாள் இனைய நினைந்தழுங்குமேல்வை. (பா: 632)

**அங்காரதாரை** - அனுமன் கடல் தாவும்பொழுது குறுக்கிட்ட ஓர் அரக்கி. (சு: 76)

**அங்கி** - நெருப்பு; அக்கினி. மங்கல அங்கி. (பா: 1344)

2. ஈமத்தீ. அங்கி நீரினுங்குளிர. (அ: 929)

**அங்கிடை** - அவ்விடம். அங்கிடை உற்ற குற்றம். (பா: 1023)

**அங்கிப்படை** - ஆக்கினேயாஸ்திரம். அங்கிதன் நெடும்படை தொடுத்து. (யுத் : 3715) அங்கியின் நெடும்படை. (ஆ : 1117)

**அங்கிபுக்கிடு** – அக்கினிப்பிரவேசம் செய். அங்கிபுக்கிடு என்றுணர்த்திய அது மனத்தடையேல். (யுத் : 4042)

**அங்கியின் குண்டம்** – அக்கினிகுண்டம். பெய்கணை நெருப்பால் கூனே அங்கியின் குண்டமொத்தது கடற்குட்டம். (யுத் : 553)

**அங்கியின் புதல்வன்** - அக்கினி குமாரனுன நீலன். அன்புடை உள்ளத்தண்ணல் அங்கியின் புதல்வன். (யுத் : 1895) [பா : பே]

**அங்கியின் வினை** - ஓமம். அங்கியின் வினையிற்கேற்ற யாவையும் அமைத்து. (அ : 262)

**அங்கு** - அசை. மானிடர் மற்றங்கு அவர் வாளால் நின் மருகிக்கும் நாசிஇழக்கும் நிலை நேர்ந்தார். (ஆ : 733)

**அங்குசம்** – மா வெட்டி. தோட்டி. (சு : 164)

**அங்குசம் நிமிர்தல்** – அங்குசம் தன் வளைவு நிமிர்ந்து போதல். அங்குசம் நிமிர எங்கும் இரியலில். (பா : 877) நிறையெனும் அங்குசம் நிமிர்ந்துபோயதே. (பா : 603)

**அங்குரம்** – முளை. துறையறத்தின் வித்தின் முளைத்த அங்குரங் கொல். (சு : 538)

**அங்கை** – அகங்கை ; உள்ளங்கை. அங்கை கவித்து. (சு : 227) அங்கையோடங்கைதாக்கி. (யுத் : 947) அங்கையோடங்கை கொட்டி (யுத் : 2228)

**அங்கையின் ஆயமந்திரம்** – முன்னமே பழகிக் கைவந்த மந்திரம். அங்கையின் ஆய மந்திரத்தை ஆய்ந்தனள். (ஆ : 254)

**அங்ஙனம்** – அவ்வாறு. வேதம் எங்ஙனம் அங்ஙனம் அவை சொன்ன விதியால். (யுத் : 183)

**அச்சம்** – பயம். அச்சமகற்றி. (ஆ : 736) அமரரை அச்சம் சுற்றப் பொன்னெடுந் தேரிற் போனுன். (சு : 825)

**அச்சிரத்தை** – 1. அப்படிப்பட்ட சிரத்தை. (உ. வி)
2. அவமதிப்பு. அச்சிரத்தைக்கொரு பொருளன்று. (யுத் : 40)

**அச்சிறுதல்** – அச்சு முரிந்து விழுதல். ஆயிரந் தேர் ஒரு தொடையின் அச்சிறும். (யுத் : 2442)

**அச்சு** – 1. மாதிரிப்படி. (அண்) (வை.மு)
2. அச்சாணி. (கு)
3. உயிர் மூலரூபம் ; ஆதாரம். (வெ. ப) அச்சென நினைத்த முதலந்தணன். (பா : 1237)
4. தேரில் உருள் கோத்த மரம் ; இரிசு. அச்சொடு நெடுந்தேர்க் கொடி துணிந்தன. (ஆ : 445)

5. அதிசயம். உண்மை (கலா) மனத்திற் பதிதல். (வை. மு) தமிழ் முனி இயம்பிற்றெல்லாம் அச்செனக் கேட்டாயன்றே. (யுத் : 2899)

அசங்கிடல் - (அசங்குதல்) அசைதல். (வை. மு.) தளர்தல். (கலா) வேர்த்தசங்கிட அண்டம் வெடிபட. (யுத் : 1061)

அசஞ்சலப்படை - சஞ்சலத்தை அடையாத படை. போரிற் பின்வாங்காத படை. அசஞ்சலப்படை ஐயிரு கோடியன். (யுத் : 502)

அசட்டர்கள் - அசடர் : நல்லறிவில்லாதவர். (அண்) திறமை யற்றவர். (கலா) அசட்டர்கள் ஐவரை அறுவராக்கிய வசிட்டன். (பா : 256)

அசத்தம் - அசக்தம் ; வலிமை பெருமை. பின்னக அசத்த பொருளில்லை. (யுத் : 3643)

அசத்து-நேர்மையற்ற வழி. போலி வழி. அசத்தினிற் செல்கிலாச் சது முகத்தவற்கு. (யுத் : 3784)

அசதி - சிரிப்பு (பா : 1070)

அசதியாட்டல் - நகைச் சிரிப்பைத் தோற்றுவித்தல். (பா : 1070)

அசதியாடல் - (அசதியாடுதல்) பரிகசித்தல். அலைகுழல் சோர் தர அசதியாடலால் (பா : 1070) [பா : பே]

அசமஞ்சன் - சகரன் புதல்வன் ; தாய் விதர்ப்பை. (பா : 511)

அசன் - அயன் : தசரதன் தகப்பன். அசனென்பான். (பா : 732) [பா : பே]

அசனம் - 1. உணவு. அசன அப்புலத்து அகணி நாடு. (கி : 907)
2. ஒரு மரம் ; வேங்கை. (உ. வீ) (கி : 907) [பா : பே]

அசனி - 1. இடி. அரு வரை முழையின் முட்டும் அசனியின் இடிப்பும். (சு : 751)
2. வச்சிராயுதம். அசனியின் அணிகள் அணிந்தார். (சு : 765)

அசனிக்கார் - இடியோடு கூடிய மேகம். அசனிக்காருங் கடலும் ஒரு வழிக் கொண்டார்த் தென்ன. (அ : 612)

அசனிக்குலம் - இடித்தொகுதிகள். (யுத் : 3044)

அசனிமாமழை - இடியுடைய கரிய மேகம். (அ : 1003)

அசனிமாரி - இடிமழை. (யுத் : 2414)

அசனியேறு - பேரிடி. அசனி ஏற்றினல் தவ்வியகிரி. (கி : 979) (யுத் : 1527)

அசித்தல் - சிரித்தல் (ஹஸித்தல்) எஃகினேடு இரும்பு அசிக்கும் எயிற்றினன். (யுத் : 1282)

அசுணம் - இசையறிவதொரு விலங்கு. (அண்) ஒரு வகைப் பறவை. (வை. மு) அசுணநன்மாச் செவி பறையடுத்தது போலும். (பா : 7) தூம மேனி அசுணம். (கி : 757)

அசுணமா - அசுணம். கனிந்த பாடல் கேட் டசுணமா வருவன காணாய். (அ : 760)

அசும்பு - 1. நீர்க்கசிவு. அசும்பு பாய்வன. (அ : 770)
2. நீர் ஊற்று. அசும்புடைத் தெய்வக் கற்பக நாடு. (சு : 90)
3. நீர்த்திவலை. கலங்கிய நீர்த்திவலை. அசும்பற வறந்தன வான ஆறெலாம். (யுத் : 578) (யுத் : 2559)
4. குருதி நீர். சில பசும் புண்கள் அசும்பூற. (சு : 304)
5. வழுக்கு நிலம். சேற்று நிலம். கரிபடுமதத்தின் அசும்பிற் சேறுபட்டமிழுமால் அடங்க. (யுத் : 3278)
6. நீர் வெள்ளம். அசும்புடைக் குருதி பாயும் ஆகத்தான். (யுத் : 1910)

அசும்பு படு சோரி - பெருக்குப் பொருந்தின இரத்தம். அசும்பு படுசோரி விரிவுற்று ஓங்கின நெடும்பரவை ஒத்து. (யுத் : 3404)

அசுரர் - அமுதமாகிய உணவு இல்லாதவர். (பா : 502)

அசைத்தல் - முடித்தல் ; கட்டுதல். அடைய வாரி அரவால் அசை. (ஆ : 10) அஞ்சினுடன் அஞ்சுதலை தோளுற அசைத்து. (சு : 693)

அசைதல் - 1. வருந்துதல். வாலுகம் வளர்க்கும் அம்பவள வல்லிகள் எனச் சிலர் அசைந்தார். (அ : 546)
2. நடுங்குதல். நிலைகுலைதல், தளர்தல். வசைக்கு அசைந்த எந்தையார். (அ : 1179)

அசைவு - 1. உறுதியில் தளர்தல். அசைவில் கற்பின் அவ் வணங்கை விட்டருளுதி. (யுத் : 111)
2. நடுக்கம் (அண்) தளர்வு. (வை. மு) ஆர்கலி ஆர்ப்பின் உட்கி அசைவுற. (ஆ : 424)

அஞ்சடுத்த அமளி - சிறு பூளை, செம்பஞ்சு, வெண்பஞ்சு, சேணம், உறுதூவி என்னும் ஐந்து பொருளை உள் வைத்துத் தைத்த படுக்கை. (அ : 1076)

அஞ்சம்பு - ஐந்தம்பு, தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம் என்பன. அஞ்சம்பையும் ஐயன் தனது அலகம்பையும் அளவா. (அ : 620)

அஞ்சல் - 1. தோற்றல். அந்தர தலத்திரவி அஞ்ச ஒளிவிஞ்ச. (பா : 321) அஞ்சினர் நெஞ்சுபோல் என்றும் ஆறுதரோ. (பா:348)
2. கீழ்ப்பட்டுப்போதல். மழை அஞ்ச முழங்கின மாமுரசே. (யுத் : 1697)
3. பின் வாங்குதல். யாழிசை அஞ்சிய அஞ்சொல் ஏழை. (அ : 186)

4. பயப்படுதல். அஞ்சினேன். (யுத் : 421) யான் அஞ்சினன். அஞ்சுக. (யுத் : 1684) அஞ்சலை அரக்க. (சு : 1126) அஞ்சலர். (யுத் : 547) அஞ்சன்மின். (3954)

5 அஞ்சற்க. அஞ்சவேண்டாம். அஞ்சல் என்ற இந் நல்லவன் தோற்பதே. (ஆ : 945) (யுத் : 422)

அஞ்சல் அஞ்சல் - அஞ்சற்க அஞ்சற்க. அபயக் குறிப்பு. ஊக்க மூட்டுதற் குறிப்பு. அஞ்சல் அஞ்சல் என்கிலாத ஆண்மை என்ன ஆண்மையோ. (பா : 798) (யுத் : 1778)

அஞ்சலி - கூப்பிய கைபோல இருப்பதொரு பாணம். அஞ்ஜலி, அஞ்ஜலிகம் என்றும் வழங்கும். அஞ்சலி அஞ்சுகோடி தொடுத்து. (யுத் : 2065)

அஞ்சலித்தல் - கைகூப்புதல்; கூப்பி வணங்குதல். அஞ்சலித்த மலர்க்கையார். (ஆ : 207) அஞ்சலித்து. (யுத் : 547)

அஞ்சன்மின் அஞ்சன்மின் - அஞ்சாதிருங்கள் அஞ்சாதிருங்கள். அபயமளித்தற் குறிப்பு. அஞ்சன்மின் அஞ்சன்மின் நீர் எனு. (யுத் : 3956)

அஞ்சனக் கருமுகிற் கொழுந்தெழில்காட்டும் சோதி - மையும் புதிய மேகமும் என்னும் இவற்றின் செழுமையான அழகைத் தன்னிடத்தே காட்டுகின்ற ஒளிமயமான திருமால். (பா : 284)

அஞ்சனக்கிரி - மைம்மலை. கரிய நிறமுள்ள மலை. அஞ்சனக் கிரியனான். (ஆ : 25)

அஞ்சனநோக்கம் - மைதீட்டிய கருங்கண்ணின் நோக்கம். அஞ்சனநோக்கம் பார்க்க இருண்டதோ அறிகிலேமால். (பா : 1157) [பா : பே]

அஞ்சனபுஞ்சம் - மையின் தொகுதி. மைக்குழம்பின் திரட்சி. அரண்டு அருகுஞ்செறி அஞ்சனபுஞ்சம் முரண்டனபோலிருள் எங்கணுமுந்த. (ஆ : 1073)

அஞ்சனம் - 1. மை. அஞ்சனவண்ணன். (அ : 1006) (சு : 1200) 2. கருநிறம். அஞ்சனக்குன்று. (யுத் : 4172) அஞ்சன மேகம். (யுத் : 2321) அஞ்சனமேனியான். (பா : 1157) அஞ்சன வண்ணத்தான். (பா : 562)

அஞ்சனவாரி - மை படிந்த கண்ணீர். அஞ்சனவாரிசோர. (பா : 938)

அஞ்சனை - அஞ்சனாதேவி. அனுமன் தாய். அஞ்சனை வயிற்றின் வந்தேன். (கி : 58) அஞ்சனைக்குரிய குன்றைப் போர்த்தது. (சு : 953) அஞ்சனை சிறுவன். (சு : 426) அஞ்சனை தோன்றல். (சு : 910)

அஞ்சி அஞ்சி - (அ : 242)

அஞ்சி அயர்தல் – அச்சங்கொண்டு சோர்தல். அஞ்சினன் அயர்ந்தனன் அருவிக்கண்ணினன். (உ. வி) (அ : 945)

அஞ்சில் ஐம்பதில் ஒன்றறியாதவன் – ஐந்து வயதிலும் ஐம்பது வயதிலும் தக்கதொரு செயலை அறியாதவன். (கி : 569)

அஞ்சிலோதி – அம் சில் ஓதி. அழகிய சிலவாகிய கூந்தல். அரக்கியர் வடித்த அஞ்சிலோதி. (சு : 99)

அஞ்சினுடன் அஞ்சுதலை – பத்துத்தலை. (சு : 693)

அஞ்சினேன் அஞ்சினேன் – பெரிதும் அஞ்சினேன். (யுத் : 3197)

அஞ்சினேன் என்றருளலை – அஞ்சினேன் என்று நினையாதே. (யுத் : 3079)

அஞ்சினோடிரண்டு – ஏழு. ஓதம் அஞ்சினோடிரண்டும் வந்தொரு பொடியாக. (யுத் : 547)

அஞ்சு – 1. ஐந்து. அஞ்சு வணத்தின் ஆடை. (சு : 174)
2. பஞ்சபூதங்கள். அஞ்சும் அஞ்சும். (அ : 305) (பாயி : 31)
3. ஒளி. அஞ்சு வள் நத்து. (சு : 174)

அஞ்சு கோடி – ஐந்து கோடி. (யுத் : 2065)

அஞ்சுதல் – பயப்படுதல். நம்மை அஞ்சுகின்றிலர். (யுத் : 104)

அஞ்சுதேர் – ஐம்புல ஆசையாகிய தேர். மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐவாய வேட்கை அவா. மனமெனும் இழுதை ஏறிய அஞ்சு தேர். (அ : 19)

அஞ்சும் அஞ்சும் – உடம்பாக நின்ற ஐந்து பூதங்களும் பயப்படும். (அண்) மிகவும் அஞ்சும். (கலா) (வை. மு) அஞ்சும் அஞ்சும் என் ஆருயிர் அஞ்சுமால். (அ : 305)

அஞ்சுமான் – சகரன் பேரன்; அசமஞ்சன் புதல்வன். (பா : 511)

அஞ்சு முகத்தவன் – ஐம்முகத்தவனான சிவபிரான். (யுத் : 1684)

அஞ்சுவணத்து – 1. அம் சுவள் நத்து. நீரில் உள்ள அழகிய நத்தை. (வை. மு)
2. அஞ்சு வள் நத்து. ஒளியுள்ள செழுமையான நத்து. அஞ்சு வணத்தின் முத்து. (சு : 174)

அஞ்சுவணம் – 1. அஞ்சு வண்ணம். (நிறம்) (சு : 174)
2. அஞ்சு உவணம். (கருடன்) (சு : 174)
3. அம் சுவணம் (சுவர்ணம்) பொன். (சு : 174)

அஞ்சுவருதல் – அஞ்சுதல். அஞ்சுதலைச் செய்தல். அஞ்சுதலைப் பொருந்துதல். அஞ்சுவரும் வெஞ்சுரனும் ஆறும். (கி : 768)

அஞ்சுவித்தல் – அஞ்சும்படி செய்தல். அஞ்சுவித்தானும் ஒன்றால் அறிவுறத் தேற்றியானும். (சு : 481)

அஞ்சொடையிரண்டு - பதினைந்து. அஞ்சொடையிரண்டு யோசனை அகலத்த தாகி. (கி : 733)

அட்டதிக்கு - எட்டுத்திக்கு. (ஆ : 807)

அட்டமூர்த்தி – ஐம்பூதம், சூரியன், சந்திரன், யஜமானன் என்னும் எட்டையும் திருமேனியாகக் கொண்ட சிவபெருமான். அட்டமூர்த்தி தாள்பணியும் ஆற்றலான். (கி : 118)

அட்டாலை – கோட்டை மதிலின் மேல்மண்டபம். கதன வாயிலும் கட்டும் அட்டாலையும் முதல யாவையும். (யு : 994)

அட்டில் - மடைப்பள்ளி. முட்டில் அட்டில். (பா : 57)

அட்டிவைத்த – வார்த்திருக்கின்ற ; தோன்றியுள்ள. முளைகள் அட்டிவைத்தன பாலிகை. (யுத் : 1437)

அட்டுதல் - 1. புகுத்தல், நிறைத்தல், புழுதி அட்டிச் செம்மிய குடம். (கி: 735) [பா : பே]
2 நிரப்பி வைத்தல். மணிகள் அட்டிய பேழை. (யுத் : 586)

அட - இகழ்ச்சிக் குறிப்பு. வம்மின் அட வம்மின். (யுத் : 3406)

அடகு – இலை; கீரை; இலையுணவு. மெல்லட குண்டு விளங்கினன். (அ: 644) அருந்தும் மெல்லடகு. (சு : 344)

அடங்கல் – 1, கெடுதல். சாயடங்க. (அ : 238)
2. நீங்கி ஒழிதல். தன்குல நன்மையும் போயடங்க. (அ : 238)
3. நிறைதல். தீயடங்கிய சிந்தையாள். (அ : 238)
4. மூடுதல். வாயடங்கின என்ன. (அ : 238)
5. முழுவதும் ஆதல். தற்கடங்கி யுலந்தவர் தம்முயிர் தெற்கு அடங்க நிறைந்து செறிந்தவால். (யுத் : 1010) வேரொடும் அடங்க நூறுவதுவே கருமம். (யுத் : 68)

அடங்கலர் – பகைவர். வேற்றடங்கலர் ஊரெனமெல்லிதால். (அ : 829)

அடங்குதல் - 1. சேர்தல். ஒருவன் வலியால் விழுங்கும் ஆலத்தின் அடங்குவதன்றீது. (ஆ : 700)
2. ஓய்தல். (கலா) முற்றுப்பெறுதல். (வை. மு) மண்டமர் இன்றொடும் அடங்கும். (யுத் : 1486)

அடம்பு - ஒரு கடற்கரை மரம். கொடியுமாம். (யுத் : 332)

அடர் – 1. அடர்தல் ; நெருங்கியிருத்தல். அடர்சிலை. (யுத் : 441)
2. அடல் ; வலிமை ; போர் ; வெற்றி. சண்டகர் அடர் கடந்த திரள் புயம். (சு : 1075)

அடர்கள் – வெற்றிகள். (உ. வி) அடர்கள் தந்த திரள் புயத்து ஐய. (சு : 1075)

அடர்த்தல் - நெருக்குதல். பல்படை புடைத்தடர்த்தார்த்தெரி புகையும் கண்ணினுர். (ஆ: 477) [பா:பே] அமரர் கணத்தொடு மடர்த்த போர்த்தாளை இந்திரனை. (ஆ: 327) [பா:பே]

அடர்தல் -1. மோதுதல், போரிடல். அதிரும் வெங்கணை ஒன்றையொன்றடர்ந்தெரி உய்ப்ப. (யுத்: 564) வெம்போர் அடர்கிற்பீர். (கி. 1017) அடர்ந்தார். (யுத்: 2302)
2. ஒழித்தல். அடர்ந்தன கிரிகளை அசனி ஏறென. (யுத்: 1999)
3. நெருங்குதல். அடர்ந்து வந்து அனங்கன் என் நெஞ்சமுன்று சிந்தும் அம்பு. (பா: 801)
4. செறிதல். (கலா) ஒத்தல் (வை. மு) பாகடர்ந்து (யுத்: 3964)

அடல் - 1. வலிமை. அடலிராமன். (ஆ: 24) அடல்சேர் அசுரர். (பா: 628)
2. வருத்துந் தன்மை. அடல் எல் ஆம் கிரி. (சு: 32)
3. போர். நெருங்கடல் விளைப்பர் நெடுநாள். (சு: 168)

அடல்வலி - மிக்கவலி. அடல்வலி நிருதர். (யுத்: 1773)

அடவி - காடு. அடவி புடை படைத்த வையகம். (ஆ: 1140) அரியினஞ் சென்ற சென்ற அடவிகளனைத்தும். (யுத்: 4119)

அடா - 1. இகழ்ச்சிக் குறிப்பு. நில்லடா சிறிது நில்லடா. (யுத்: 2025) எங்கடா போதி. (யுத்: 2389)
2. அடுக்காத. அடாப்போர். (போரடா) (உ. வி) (கலா) (யுத்: 259)

அடாதன - அடுக்காதன; பொருந்தாத; தகுதியற்றன. நினைத்தற்கும் அடாதன செப்பி. (யுத்: 165) அன்பழி சிந்தை தன்னுல் அடாதன அறையல் என்ருன். (யுத்: 908)

அடாநின்ற - பொருந்திய; அடுத்து நின்ற. பேர் அடா நின்ற தாளோடு உலகெலாம் பெயரப் போவான். (உ. வி) (யுத்: 259)

அடாநெறி - பொருந்தாத நெறி. அடா நெறி அறைதல் செய்யா அருமறையமைந்த நீதி. (பா: 1114)

அடி - 1. பாதம், கால்கள். அடி துணிந்தன கடகளிறு. (ஆ: 445) அடியொன்று கடிதோட்டிக் குந்திவந்தனன். (யுத்: 1567)
2. அடிச்சுவடு. ஆங்கோர் குரங்கினதடி யுமின்றிப் போக்கினுன். (யுத்: 1423)
3. கீழ்ப்பாகம். மண் அடியற்று. (சு: 92)
4. மூலம். எண் அடியற்ற குன்று. (சு: 92)

அடிகதுவ - பாதங்களை வணங்கிச் சூழ்ந்துவர. காவலர் சூழ வந்தடி கதுவ. (பா: 1350)

அடிகள் - பெரியாரே. யாரிவவரை உரைத்திடுமின் அடிகள் என்ன. (பா: 720)

அடிகுரல்முரசு - அடிக்கப்படுகின்ற ஒலியையுடைய முரசு. அடி குரல் முரசதிர் அயோத்தி மாநகர். (பா: 255)

அடிகுறுகல் - அடிகளில் விழுந்து வணங்குதல். கோக் குமரரும் அடிகுறுக. (பா: 359)

அடிச்சுவடு - பாதங்களின் சுவடு. சீறடிச் சுவடுகள் பாராய். (756)

அடிசில் - உணவு. தூய கடல்நீர் அடிசில் உண்டு அது துறந் தான். (ஆ: 155)

அடிசூடுதல் - பாதங்களைத் தலையிற் சூடுதல். அன்னை அடித்துணை சூடி. (பா: 1339)

அடித்தல் - மட்டமாகச் செய்தல். (அண்) கெட்டணை பண்ணல். (வை. மு) (கலா) கல்லடித்தடுக்கி. (பா: 116)

அடித்தலத்துரைத்தல் - முன்னே சொல்லுதல். (கலா) பாதங் களில் சொல்லுதல். (வை. மு.) (அண்) விண்ணப்பித்தல். எந்தை அடித்தலத்துரைத்து. (பா: 427)

அடித்தலம் - 1. கால்கள். அடித்தலமெடுத்திடுதலால். (கி: 187) 2. திருவடி நிலைகள். அடித்தல மிரண்டையும் அழுத கண்ணி னன் முடித்தலமிவையென முறையிற் சூடினன். (அ: 1201)

அடித்தொழில் - அடிமைத்தொழில். அடித்தொழில் ஏவலாள னேன். (யுத்: 4176)

அடிதாழா - அடிவணங்கி. பத்தியினுயிரீயும் பரிவினன் அடி தாழா. (அ: 680)

அடிதொழத்தொழ - அடிகளிலே பலமுறை வணங்க. ஒருத்தன் மனையுற்றுள் பொன்னடி தொழத் தொழ மறுத்தல் புகழ் போலாம். (யுத்: 62)

அடிநாயேன் - அடித்தொண்டன். (அ: 680)

அடிபதைத்தல் - கால்களை உதறுதல். அதிர மாநிலத் தடி பதைத்து அரற்றிய அரக்கி. (ஆ: 321)

அடிபோற்றல் - அடிபரவல். அடிவைத்தலைப் புகழ்தல். (கு) அடியீடு பரவல். அன்னே தேனே ஆரமிர்தேயென் றடிபோற்ற. (பா: 593)

அடிமணி - அடிப்படையில் இடும் மணி. மூலவிக்கிரகம் பிர திட்டை செய்யுமிடத்தும் கட்டட அத்திவாரத்திலும் மணிகளை இடுதல் மரபு. முளையிடுதல். (உ. வி) அவன் இனி முடிக்கும் வெற்றிக்கு அடிமணி யிட்டா யன்றே அரிக்குலத்தரச. (யுத்: 887)

அடிமையிற் கிடைத்தல் - அடிமைத் தொழில் புரியும் வேலையில் அமைதல். கேட்ட வாசவன் அன்னவட் கடிமையிற் கிடைத்து. (பா: 506)

**அடியவர்க்கடிமை** - அடியார்க்கு அடிமை செய்தல். புவிகொள் நாயகற் கடியவர்க் கடிமையிற்புக்கார். (யுத்: 162)

**அடியற்று** - முழுமையும் அற்று: கட்டுக்குலைந்து. அடியற்றுக. (கி. 601)

**அடியன்** - அடியன். (அ :550) [பா : பே] அடியேன். (அ. 423)

**அடியனேன்** - (யுத் : 1590)

**அடியிணை** - உபய பாதம். அடியிணை படியில் தோயத் திரு இங்கு வருவாள் கொல்லோ. (ஆ : 283)

**அடியுறத்தழுவுதல்** - பாதங்களை இறுகப்பற்றுதல். மொழிந்த பின்னரும் அடியுறத் தழுவினன். (அ : 556)

**அடியுறை** - பாதகாணிக்கை. மாலை மாயிருங் கரத்தால் அடியுறையாக வைத்து. (யுத் : 607) (யுத் : 3129)

**அடியோம்** - (அ: 674)

**அடிவருடல்** - கால்பிடித்தல். ஏழை மகளிர் அடிவருட. (யுத் :1667)

**அடிவைத்தல்** - கால்வைத்தல்: முழுகத்தொடங்கல். அன்னமும் துயர்க்கடல் அடிவைத்தாளரோ. (அ: 1152)

**அடுக்கல்** - 1. மலை. மலைக்கற்கள் அடுக்கினாற்போல இருப்பது. அடுக்கலில் அடுத்த தீந்தேன். (பா: 24)
2. ஒன்றன் மேல் ஒன்றாக அமைத்தல். அடுக்கிய உலகம் மூன்றும். (யுத் 4304). அடுக்குற்றன. (யுத் : 3366)
3. குவித்தல் - அடுக்கிய அடுக்கல். (ஆ : 523)

**அடுக்கும்** - 1. பொருந்திய. வானவருக்கும் நாண தடுக்கும் வசை மன்னோ. (ஆ : 732)
2. பொருந்தும். தகும். இனி அருந்தவம் இயற்றவும் அடுக்கும். (அ : 36)

**அடுகணை** - தவறாமல் அழிக்க வல்ல அம்பு. வெற்றி வீரனது அடு கணை. (கி : 297)

**அடுகளம்** - போர்க்களம். அடுகளம் பாழ்பட வெருக்கொண் டோட. (யுத் : 1024)

**அடுசிலை** - கொல்லும் வில். இடக்கையால் ஆற்றினான் தன் அடுசிலை (யுத் : 1058)

**அடுத்தடுத்து** - மீண்டும் மீண்டும். அவயம் நின்னவயமென்னா அடுத்தடுத்தரற்றுகின்றான். (யுத் : 601) (யுத் 3357)

**அடுத்தல்** - 1. பொருந்துதல். சங்கடுத்த தனிக்கடல். (ஆ : 813) அடா நின்ற தாளோடு. (யுத்: 259)
2. நேர்தல் : நிகழ்தல். இங்கடுத்த தன்மை இயம்புவாம். (ஆ : 813)

3. அடுத்தடுத்து நிகழ்தல். ஆயிரம் உற்பாதங்கள் ஈண்டுள அடுத்த என்றார். (யுத் : 770)
4. சேர்தல். திரு மாலும் தெறுகுலிசத்தவனும் அடுத் தொன் ருகி நின்றன்ன உருவோனே. (ஆ : 356)

அடுதல் – 1. கொல்லுதல். அழித்தல். யாம் இனி அடுகிலம். (பா : 186) அட்டன உயிரை அவ்வணிகள். (கி : 201) என்னை அட்டிலன். (யுத்: 2160). அடுவனே என்னப் பொங்கி. (யுத் : 949)
2. தகர்க்கப்படல். உடம்படும் அரக்கர். (யுத் : 2290)

அடுப்பது – 1. பொருந்துவது. எவ்விடர் எனக்கு வந்து அடுப்பது ஈண்டென. (அ: 143)
2. வருவது. யாண்டோ இனிச்சீற்றம் அடுப்பது. (அ : 423)
3. தகுவது. அலங்கலார்க்கி தடுப்பதன்ருமரோ. (கி : 344)
4. மேற்கொள்வது. தக்கது. அடுக்கும் ஈது அடாது ஈது. (சு : 465)

அடுபடை – கொல்லத்தக்க அம்பு. அவன் அங்கு அடுபடை தொடுத்துவிட் டறுத்தனன். (யுத் : 1558)

அடும்பு – ஒரு வகைக் கொடி. அடம்பு எனவும் படும். அடும்பு சிவபிரான் தலையில் தரிப்பது. அடும்பு ஆக்கியத் தொடைச் செஞ்சடை முதலோன். (யுத் : 3034) [பா : பே]

அடை - 1. இலை. விரி தளிர் முகைபூக் கொம்படை முதல் வேர் பழமிவை. (சு :425) அடை திருத்தினுல். (கி : 679)
2. தேனடை. அடை சுற்றும் தண் சாரல் ஓங்கிய வேங்கடம். (கி : 769)
3. அடர்ந்திருத்தல். ஈர்க்கடை பகழிமாரி. (யுத் : 2157)

அடைக்கலப்பொருள் - ஆபத்துக்காலத்தில் உதவும்படி வைத் துள்ள பொருள். அடைக்கலப் பொருளென அரக்கன் வீசிய படைக்கலம். (யுத் : 3737)

அடைக்கலம் – 1. அடைக்கலப்பொருள். அடியனேனும் அடைக் கலம். (யுத் : 1591)
2. அடைக்கலப் பொருளாகப் பாதுகாத்தல். இன்னம் உனக்கு அடைக்கலம் யான் வேண்டினேன். (யுத் : 1575)

அடைகல் – 1. தாங்கு பீடம். அடைகல் ஆழியான். (கி : 254)
2. பட்டடைக்கல். சுட்ட மெல்லிரும்பு அடைகலைச் சுடுகிலாதன போல். (சு : 1008)

அடைத்த –1. ஏற்ற. அடைத்த நல்லுரை இயம்பினன். (யுத்:3236)
2. நிரம்பிய. வேறுவேறடைத்த ஊர்திகள். (யுத் : 3034) [பா:பே]

அடைத்தல் – 1. அறுதியிடுதல். அறுதியிட்டு நிரப்புதல். (கலா) அடைக்கலாம் அறிஞர் யாரே. (யுத் : 3479)
2. அணை கட்டுதல். அடைக்க வந்தான் எனை. (யுத் : 467)
3. மிகுதியாகப் பொருந்துதல். துன்படைத்த மனத்தன். (யுத் : 1030)
4. சிறை வைத்தல். மனத் தடைத்த சீதை. (யுத் : 3903)
5. அடக்குதல். அடைப்பர் ஐம்புலன்களை. (யுத் : 3987)
6. தூர்த்தல். உலகில் அடைந்த ஆறெலாம். (யுத் : 594)

அடைத்து வைத்தல் – உள்ளே சேர்த்து வைத்தல். நீ தேடிய பலவும் அடைத்து வைத்தன திறந்துகொண்டு ஆற்றுதியாயிற் கிடைத்தி. (யுத் : 1215)

அடைதல் – 1. அருகில் நெருங்குதல். அடைந்து அவண் நோக்கி. (அ : 188)
2. பதிதல். உரைத்த பொருளோ மனத்திலடையா. (ஆ : 967)
3. பொருந்தியிருத்தல். மாசடை பேதைமை. (கி : 9) (உ. வி) (கி : 535)
4. சேர்தல். அமைதல். செய்யடைதீ. (கி : 535)
5. அடங்குதல். அஞ்சன மணிநிழலடையப் பங்குபெற்று. (கி:21)
6, கொள்ளல். அங்கி புக்கிடென்றுணர்த்திய அது மனத் தடையேல். (யுத் : 4042)

அடைந்த – இல்லையாயின. தூர்ந்திட்டன. (யுத் : 594)

அடைப்பை – வெற்றிலைப்பை. (ஆ : 854)

அடைய – முழுவதும். நண்ணியவெலாம் அடைய வாரி. (ஆ : 10)

அடையலர் – பகைவர். (அ : 453)

அடையார் – பகைவர்.

அடையாளம் - அறிகுறி. தெய்வ மருந்தடையாளமென்ன. (யுத் : 2715)

அடைவரும் – முறைமையற்ற. (அண்) பொருந்திய. (வை. மு) அடைவருங் கொடுமை என் அன்னை. (அ : 948)

அடைவு – 1. முறை. அடைவரும் கொடுமை. (அ : 948)
2. காரணம். (வை.மு) தொடர்பு. (அண்) அன்பினுக்கு அவதியில்லை அடைவென்கொல் அறிதல் தேற்றேன். (கி : 56)

அண்டகூடம் – அண்டகோளம். (அண்) அண்டமாகிய வீடு. (கு) அண்ட முகடு; அண்டத்தொகுதி. அண்டகூடமும் சாம்பராய் ஒழியுமென்றஞ்சி. (பா : 491)

அண்டகோளகை – அண்ட கடாகம். அண்ட கோளகைக்கப் புறத்தென்னையாளுடைய கொண்டல்நீள்பதம். (பா : 482)

**அண்டகோளம்** – அண்ட உருண்டை. அண்ட கோளச் சூழிருஞ் சுவரில் தேய்க்கும் சிலவரை. (யுத் : 270)

**அண்டங்கள் மேல கீழன** - மேலுங்கீழுமாய் நெருங்கியுள்ள அண்டங்கள். (அண்) (கலா) அண்டங்கள் மேல் கீழனவாய், தலைகீழாய். (வை. மு) அண்டங்கள் மேல கீழன உடைந்து போம். (ஆ : 820)

**அண்டங்கீறல்** – அண்டம் பிளத்தல். திசைதிறந் தண்டங்கீறிச் சிரித்தது செங்கட்சீயம். (யுத் : 257) [பா : பே]

**அண்டசம்** - முட்டையிற் பிறப்பது. ஆதிசேடன். அண்டசத் தருந்துயில் துறந்த ஐயன். (ஆ : 235)

**அண்டசன்** - முட்டையிற் பிறந்தவனாகிய ஆதிசேடன். அண்டசன் மணிச்சயனம். (யுத் : 3652)

**அண்டசன் மணிச்சயனம்** – முட்டையிற் பிறந்த ஆதிசேடனாகிய மணிச்சயனம். திருமாலின் அழகிய படுக்கையாகிய ஆதிசேடன். (யுத் : 3652)

**அண்டத்தப்புறம்** – இவ்வண்டத்திற்கு அப்பாலுள்ள பகுதி. அண்டத்தப்புறம் போயுந்தேட அவதியின் அமைந்து போன. (சு : 522)

**அண்டத்தின் புறநிலம்** – உலகத்திற்கு அப்பாலுள்ள வெளி நிலம். அண்டத்தின் புற நிலத்தையும் கைம்மிகப் போயதே. (சு : 720)

**அண்டப்பித்திகை** - அண்டப்பரப்பின் சுற்றுமதில். அண்டப் பித்திகை பூசின வெண்மயிர் பொடித்த வெம்பொறி. (கி : 247)

**அண்டப்பொகுட்டு** – அண்டகோளம். பூதலப்பரப்பில் அண்டப் பொகுட்டினுள். (சு : 1155)

**அண்டம்** - 1. முட்டை. அண்டமிரண்டு முயிர்த்திட. (கி : 982)
2. உலகம். அவ்வளவகன்றதரண் அண்டமிடையாக. (சு : 159)
3. மேலுலகம். அண்ட மென்றதினுறை அமரர் யாரையுங் கண்டனன். (சு : 589)
4. வானம். அந்திவந்திறுத்தது கறுத்த தண்டமே. (யுத் : 462)

**அண்டம் விற்றல்** - அண்டத்தை விலையாகக்கொள்ளல். அண்டம் விற்கும் நன் காசு. (யுத் : 3626)

**அண்டமுகடு** – அண்டத்தின் உச்சி. உயருமேல் அண்டமுகடு தன் முடியுற உயரும். (யுத் : 143)

**அண்டமும் அகண்டமும்** – அண்டங்களையும் எல்லாப் பொருளையும் அனைத்தையும். அண்டமு முற்று மகண்டமு மேனுள் உண்டவன். (யுத் : 444)

அண்ட மூலத்துக் கப்பாலாழி - ஆவரணக்கடல். அண்ட மூலத்துக் கப்பாலாழியுங் கொதித்தது. (யுத் : 595)

**அண்டமூலம்** - 1. அண்ட கோளத்தின் மேற்பாகம். அண்ட மூலத்தோர் ஆசனத் திருத்தினை ஐய. (யுத் : 4040)
2. அண்ட கோளத்தின் அடி. அண்டமூலத்துக் கப்பால் ஆழி. (யுத் : 595)

**அண்டர்** - 1. இடையர். அண்டர்தம் மனை ஆவின் கன்று (அ : 699)
2. தேவர். பூவின் அண்டர் கோன். (யுத் : 3347)

**அண்டர் நாதன்** - தேவர் தலைவனான இராமபிரான். (யுத் : 4165)

**அண்டர் நாயகன்** - 1. தேவர் தலைவனாகிய இராமபிரான். (யுத் : 4169) (அ : 55)
2. இந்திரன். அண்டர் நாயகன் ஆயிரங் கண்ணினும் அடங்காப் புண்டரீகத்தின் முகை. (யுத் : 3775)

**அண்டா** - தலைவனே. அண்டா ஐயா எங்கள் பொருட்டால் அயர் கின்றாய். (யுத் : 2614)

**அண்ணம்** - மேல்வாய். அணம் என விகாரப்பட்டு வரும். (யுத் : 3344)

**அண்ணல்** -1. பெருமையுடையவன். அண்ணல் வன மேகுதலும். (அ : 383)
2. தலைவன். கடவுள். அறத்திறனழியச் செய்யான் புவியிடை அண்ணல். (கி : 365)
3. பெருமை. அண்ணல் வாளரவு. (பா : 756)

**அண்ணல் மரபிற் சுடர்** - இராமபிரான் மரபின் முதல்வனான சூரியன். (பா : 1227)

**அண்ணியர்** - போன்றவர். (வை. மு) (கலா) புகலும் வாளரிக்கு அண்ணியர். (பா : 955)

**அண்முதல்** - அடைதல். அணுகுதல். (கலா) நாயகற் காணவந் தண்மினார். (அ: 627) ஓர் மண்டபத்தை அண்மி. (பா : 241) [பா : பே] அண்மீயது. அண்ம. (சு. 986)

**அணங்கார் பாகன்** - சிவபெருமான். (கி 396)

**அணங்கினுக்கணங்கு** - திருமகளுக்கும் மேம்பட்ட திருமகள். அணங்கினுக் கணங்கனாய். (ஆ. 884)

**அணங்கு** - 1. மோகினி. இயக்கனும் அணங்கனாளும். (பா : 372)
2. தேவ மாது. மாசறு கற்பின் மிக்க அணங்கு. (பா : 563)
3. துன்பம். வருத்தம். அணங்குறும் அவிஞ்சை கெட. (பா : 1240)
4. திருமகள். (ஆ : 884)
5. அச்சம். அணங்குற நெடுவேல் பாயும் அமர். (யுத் : 3089)

அணங்குதல் - 1. வருந்துதல். சங்கணங்கிய சலஞ்சலம் அலம்பு தவளக் கங்கணம். (ஆ : 16)
2. வருத்தஞ் செய்தல்; துன்புறுத்தல். அணங்கு வாள் விட வரா. (அ : 142)
3. நெருங்கிச் சூழ்தல். (உ. வி ) (ஆ : 16)
4. அழகுடையதாதல். (உ. வி) (ஆ : 16)

அணம் - அண்ணம். மேல் வாய். பல்லணங் குலைந்து. (யுத்: 3344)

அணவுதல் 1. பொருந்துதல்; தொடுதல். மருப்பினைக்குன்றமும் அணவி. (யுத் : 2309) அணும். (யுத் : 284)
2. படிதல். முட்டி வான்முகடு சென்றணவி. (கி. 193) [பா.பே]
3. அனுகூலித்தல். அணவில் திங்கள். (ஆ : 301) [பா: பே]

அணு - அண்ணு. ஆரணு உன்னுயிரை அஞ்சாதே கொண்ட கன்றூர். (யுத் : 3891)

அணி. 1. உவம உருபு. வெற்பணி புயத்து மாரீசன். (பா: 373) மானணி நோக்கினூர். (பா : 1208)
2. ஆபரணம். அணிகலம், அணிதூசு ஆதியாய பாங்குள மற்றவையருளி. (பா : 217) பூமகட் கணியதென்ன. (யுத்:4321)
3. அழகு. அணிமதிலயோத்தி. (பா: 577)
4. அணிமை. அண்மி நிற்றல். மாகம்மணி அணிதேர். (பா : 1353)
5. படை வகுப்பு; படை உறுப்பு. தூதுவர் அணிகள் தோறும் வரன் முறைகாட்டிச் சென்றூர். (யுத் : 3214)

அணி சமைத்தல் - அழகு செய்தல்; அலங்கரித்தல். சாற்றுக நகரணி சமைக்க. (அ : 121)

அணிதல் - 1. அலங்கரித்தல். மாகம்மணி அணிதேர். (பா : 1353) கோநகர் அணிக. (அ : 122) அணிவுறும் அமலை. (அ : 136)
2. அழகு செய்தல். ஆறணிந்து சென்று. (பா : 13)
3. பூசுதல். துவரணிந்தன வெனப்பொசி துதைந்தன. (கி : 191)
4. வரிசையாக்குவித்தல். அணியும் ஆனை வெண்கோடும் (பா : 18)

அணிமாநகர் - அழகிய பெரிய தலைநகர். அணிமா நகர் செலவே. (பா : 1350)

அணிமுரசு. அழகிய போர் முரசு. (யுத் : 3606) [பா: பே]

அணியரங்கம் - அலங்காரமான உள்ளறை; கர்ப்பக்கிரகம். (திருவரங்கம்) பரஞ்சுடரை யரங்காண அணியரங்கந் தந்தானை. (பா: 722)

அணிவகுத்தல் - வியூகப்படுத்தல். பேழ்வாய் அன்றிலின் உருவதாய் அணிவகுத்தமைத்து நின்றான். (யுத் : 2404)

அணு - மிகச்சிறிய பொருள். ஓர் தன்மை அணுவினைச் சத கூறிட்ட கோணினு முளன். (யுத்: 254) (யுத் :2137)

அணுகல்மேயினுன் - அடைய விரும்பினுன். (யுத்: 1283)

அணை – 1. உவமவுருபு. கல்லணை மனத்தினையுடைக் கைகேசி. (கி: 672)
2. கரை. நீர்ப் பெருக்கைத் தடுப்பது. குரப்பணை விரப்பு மள்ளர். (பா : 574)
3. நீர்க்கரை. தாங்கணைப் பணிலம். (சு: 528)
4. தலையணை. அங்கையணையிற் பொலிவழுங்க (அ : 547)
5. படுக்கை. எம்பிரான் புல்லணை வைக. (கி : 672)
6. ஆசனம். பூத்தொடர் மெல்லணை. (கி. 672)
7. தடை ; தடுப்பு. அணையின்றி அயர்ந்தவென்றி. (யுத் : 1142)
8 பொருந்துதல். எல்லணை மணிமுடி. (கி: 672)
9. பாலம். வேறுமோர் அணையாக. (யுத் : 1562)

அணை ஒட்டுதல் – அணை கட்டுதல். உரவு நல்லணை ஓட்டிய ஊற்றமும். (யுத் : 730)

அணை குயிற்றுதல் - அணை கோலுதல். அணையைச் செய்தல். நிரைக்கடல் நிரம்பக் குன்றுகொ டடைத்து அணைகுயிற்றிய தொர் கொள்கை. (யுத் : 693)

அணைத்தணைத்து - பலமுறை அணைத்து. அணைத்தணைத்தன்பு கூர்ந்து. (யுத் : 4262)

அணைதல் – 1. வருதல். கொண்டணைக. (சு : 1220)
2. பொருந்துதல்; கூடுதல். எல்லணைமணிமுடி. (கி : 672) கல்லணை கிழங்கு. (அ : 991)
3. பெருகுதல். அல்லணை நெடுங்கணீர். (அ : 991)
4. தான் உள்ள இடத்தில் அணுகுதல். (அண்) அணைவில் திங்கள். (ஆ : 301)
5. உட்படுதல். அணையாய் இது என் ஊழென. (யுத் : 1142)
6 நெருங்கியிருத்தல். மாவணை நீலக்குன்றம். (யுத் : 900)

அணைவு (அணவுதல்) – 1. அணுகுதல். அணைவில் திங்கள். (ஆ : 301)
2. தொடுதல். தினகரனை அணவு கொடிகள். (யுத்: 3420)

அத்தகு மரபு - அத்தகுதியான முறைமை. உரிய மாதர்கட்கு அத்தகு மரபினுல் அளித்தியால். (பா : 268)

அத்தஞ் சேர்தல் - அத்தமித்தல். அருக்கனும் அத்தஞ் சேர்ந்தான். (யுத் : 709)

அத்தம் - அத்தமனகிரி. கதிரவன் அத்தம்புக்கான். (அ : 534)

**அத்தலை** - 1. அப்பொழுது. (அண்) (ஆ ; 480)
2. அவ்விடம். யானே வேண்ட அத்தலை போதி. (கி : 439) (யுத் : 1611) அத்தலைப் பெய்தல் நினைந்திலை. (யுத் : 1960)

**அத்தன்** - 1. தந்தை. அப்பன். அரிகாண் அத்தா. (யுத் : 250) என் அத்த. (அ : 419)
2. ஐயன். அத்தா இது கேள். (கி : 271)

**அத்தனைவரும்** - அத்தனைபேரும். அவ்வளவு பேர்களும். ஆங்கவர் எத்தனைவராயிடினும் அத்தனைவரும்......வெந்தழிவர். (யுத் : 3410) (யுத் : 394)

**அத்தி** - அப்தி. நீர் தங்குமிடம். கடல். அத்தி ஒப்பெனின் அன்னவை உணர்ந்தவர் உளரால். (கி : 736)

**அத்திரம்** - 1. படை. நாணு அத்திரம் நிழற்ற. (அ : 280)
2. மலை. அத்திரம் புரை யானை அரக்கன். (சு : 265)

**அத்திரி** - ஒரு முனிவன். காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூவகைப் பகையற்றவன். அத்திரிப் பெயர் அருந்தவன். (ஆ : 2)

**அத்து** - சாரியை. எதிருற்ற செருவத்து உக்க வீரர். (ஆ : 9)

**அத்தை** - தந்தையின் சகோதரி. கானிடை அத்தைக்குற்ற குற்றமும். (சு : 998)

**அத்தையர்** - மாமியர். அத்தையர்க்கென்னுடை வணக்கம் முன் இயம்பி. (அ : 570)

**அதம்** - அத்தி மரம். (கலா) அதங்களை உருவி. (யுத் : 1430)

**அதர்** - 1. பழி. மரன்படர்கான மெங்கும் அதர்பட வந்தசேனை. (ஆ : 429)
2. விலங்கு செல்லும் நெருக்கமான வழி. தேக்குயர் கல்லதர். (அ : 156) தூது கல்லதர் செல்ல ஏவி. (கி : 650)

**அதரம்** - உதடு. பல்லால் அதரத்தை அதுக்கி. (யுத் : 1957)

**அதவம்** - அத்தி மரம். அத்திக் கட்டையாலான கருவி ; துடுப்பு. (சுருவம்) அதவமாய் நறு நெய் உண்டு. (ஆ : 45) [பா :பே]

**அதள்** - தோல். புலியினதளுடையான். (ஆ : 563)

**அதி** - மிகுதி. அதிதிகழ் அநந்த வெற்பு. (யுத் 4094)

**அதிகாயன்** - பெரிய உடலையுடையவன். இராவணன் மகன், தாய் தானிய மாலி. அதிகாய னெனும் பெயரான் அறைவான். (யுத் : 1683)

**அதிகைதவர்** - மிக்க கபடமுடையவர். மதுகைடவர் என்பவர் அதிகைதவர். (யுத் : 1743)

**அதிசயம்** - 1. புதுமை. அதிசயம் ஒருவரால் அமைக்கலாகுமோ. (ஆ : 1004)

2. மேம்பட்ட தன்மை. பரமாராம் அரன்முதல் தலைவருக்கு அதிசயத் திறலினார். (இ: 88)

அதிருசயம் என்பது அதிசயம் என மருவியது. (வெ ப)

அதிதி - காசிபன் மனைவி, காசிபனுக்கும் வாலதிதிக்குமோர் மாமக வாகி, (பா: 439) (ஆ: 201)

அதிதியர் - விருந்தினர். பழகும் அதிதியர். (யுத்: 3419)

அதிர்த்தல் - அதிரும்படி செய்தல். அனந்தன் உச்சியோடு அதிர்த்தனன் (யுத்: 1520)

2 திடுக்கிடச் செய்தல். உலகை யெல்லாம் அதிர்க்கின்றான். (யுத்: 1906)

அதிர்தல் - முழங்குதல். வேலை யென்னும் மண்ணும் மணி முழு வதிர. (பா: 716) ஆழியின் அதிர்ப்போ. (யுத்: 3275)

அதிர்மதக்குன்று - பிளிறுகின்ற இயல்புள்ள மதம் பெருகப் பெற்ற மலைபோன்ற யானை. குதிரையும் அதிர்மதக் குன்றும், (யுத்: 107)

அதிர்வு - 1. அதிர்ச்சி. ஓசையின் உலகமெங்கும் அதிர்வுற. (யுத்: 2538)

2. முழக்கம். திண்கை மங்குலின் அதிர்வு. (யுத்: 2399)

அதிரேகம் - மிகுதி. ஆரிவ் வதிரேக மாயை அறிவார். (யுத்: 2203)

அதிரேகமாயை - மிக்க மாயை. பிரமாதமான மாயை. (யுத்: 2203)

அது - 1. சுட்டு. அவர் தம் நீல நிறத்தை எல்லாரும் நினைக்க அது வாய் நிரம்பியதோ. (பா: 630) யான் அறிந்திலன் அது என்றான். (பா: 671) (சு: 767)

2. சுட்டும் பெயரை அடுத்து வருதல். பொருபடை முரண திற்றே. (பா: 666) தென்றிசையதனை நண்ணி. (பா: 671)

3. மனத் தயக்கத்தைக் குறிப்பாக உணர்த்துவது. அது ஐய செய்குவென் அடிமை என்றான். (அ: 661) [பா: பே]

அது இதுவாதல்- ஒன்று வேறொன்றாக ஆதல். ஐயன் வேண்டின் அது இதுவாமன்றே. (யுத்: 646)

அதுக்குதல் - 1. நெருக்குதல். வாயினிட்டதுக்கும். (யுத்: 1838)

2. கடித்தல். பல்லால் அதரத்தை அதுக்கி (யுத்:1957) (யுத்:338)

அதுகாலம் - அக்காலம். அதுகாலத்து. (யுத்: 1871) அதுகால மாக (யுத்: 1911)

அதுகிடக்க - அது கிடக்கட்டும். பின்னது கிடக்க என்னு. (யுத்: 3670)

அதுபொழுது - அக்காலையில்; அப்பொழுது. அதுபொழுது அரக்கர் கோனும் அணிகொள் கோபுரத்தின் எய்தி. (யுத்: 3213)

அதுபோக - அது கிடக்க. ஆ அதுபோக. (அ : 1009)

**அது மற்று** - அதற்குமேலே ; மற்றும் ; வேருக. அது மற்றவ் வழி அரணமும் பெருமையும் அறைந்தேன். (யுத் : 528)

அந்த - 1 ஹந்த அந்தொக்க அரற்றவோ. (யுத் : 3182)
2. பண்டறிசுட்டு. ஆனநாட்டு அந்த போகம் அமைத்திர். (யுத் : 3581)

**அந்தகபுரம்** - கூற்றுவன் நகர். ஒருவனை அந்தகபுரத்தின் உய்த்தே. (பா. 470)

**அந்தகற்களித்தல்** – உயிரை உடலினின்று நீக்குதல். உயிர்கள் தம்மை அந்தகற்களிக்கு நோய்போல். (ஆ : 423)

**அந்தகாரம்** – இருள். அருள் தீர்ந்த நெஞ்சிற் கரிது என்பது அவ் வந்தகாரம். (ஆ : 698)

**அந்தணர்** - எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகுவோர். சிவந்த அந்தணர். (அ : 72) அந்தணர் குழாம். (அ : 74) அந் அந்தணர் பாவை. (ஆ : 273)

**அந்தணர் நாயகன்** - திருமால். ஆணையகனை அந்தணர் நாயகனை. (ஆ : 98)

**அந்தணன்** - பிரமன். பால் நிறுத்தந்தணன் பணியணுகி. (சு: 884)

**அந்தணன் படைக்கலம்** - பிரமாத்திரம். ஈன்ற அந்தணன் படைக்கலந் தொடுக்க இவ்வுலக மூன்றையுஞ் சுடும். (யுத் : 2473)

**அந்தணாளர்** - அந்தணர். நீடு அந்தணாளர்க்கும் கைம்முறை அளித்தனர். (பா : 275) (அ : 105) அந்தணாளர்கள் ஆசியோடு. (பா : 1193)

**அந்தம்** - 1. கொக்குவாய். அந்தந்தோறும் அற்றுகு முத்தம். (பா : 997)
2. எல்லை. அந்தமிலாததோர் உறையுள். (யுத் : 461)
3. முடிவு. அந்தமில் சோகத்து அழுகுரல். (அ : 386)
4. முடிவிலுள்ள பொருள். ஆதியந்தங்கள் இதனின் மற்றில்லை. (யுத் : 183)
5. மரணம். நின்று அந்தமில்லான் ஊன்ற. (சு : 4)
6. அழகு. உடற்பொறை துறந்து உயர் பதம் புக்க அந்தமும். (கி : 90) அந்தமில் நோக்கினர். (கி : 674)
7. அழிவு. அந்தமில்திரு. (சு : 644)

**அந்தமா** - ஈருக. இறுதியாக. அந்தமாக. அரசராதி அடியவர் அந்தமா. (யுத் : 3585)

**அந்தமில் உயர்பதம்** - அழிவற்ற சிறந்த இடம் ; பரமபதம். (ஆ : 114)

**அந்தமில் திருநகர்** - அழிவற்ற செல்வமுடைய நகரம்; அயோத்தி (சு : 644)

**அந்தர்** - குருடர். அந்தரில் சென்ருெரு மூரிமாமத யானையை முட்டினுன். (பா : 486) (சு : 102)

**அந்தரகுலமீன்** - வானத்திலுள்ள தொகுதியான நட்சத்திரங்கள். அந்தர குலமீன் சிந்த அண்டமுங்கிழிய ஆர்ப்ப. (யுத் : 917)

**அந்தரத்தர்** - தேவர்கள். அந்தரத்தர் அமுது ஆர்கலிகாண. (யுத் : 828)

**அந்தரத்திசையர்** - ஆகாய வீதி வழியாகச் செல்பவர், தெவ்வழி அந்தரத்திசையராயினும். (சு : 142)

**அந்தரத்திடையன்** - விண்ணகத்தேயுள்ளான். (யுத் : 2555)

**அந்தரத்தேற்றுதல்** - கொல்லுதல். இளவல் ஓடி ஆர்த்து அந்தரத் தேற்றுவான் அழன்று பற்றலும். (சு : 987)

**அந்தரதலம்** - ஆகாயம். அந்தர தலத்திரவி. (பா : 321)

**அந்தர துந்துபி** - தேவ துந்துபி. அந்தர துந்துபி முகிலின் ஆர்த்தன. (பா : 473)

**அந்தரம்** - 1. வானவீதி. வானம். அந்தரகுலமீன். (யுத் : 917)
2. சுவர்க்கம். விண்ணுலகம். அந்தரமுற்ருன் அகலிகை பொற்பால் அழிவுற்ருன். (ஆ : 741)
3. மரணம். பெண்ணுல் வந்தது அந்தரம் என்னப் பெறுவேனே. (சு : 1126)
4. துன்பம். தீமை. விபத்து. அந்தரம் வருதலும் அனைய தீர்தலும் ......தொன்மை நீரவால். (ஆ : 1009) (ஆ : 587) (யுத் : 2794)
5. வேற்றுமை; வேறுபாடு. தாரதம்யம். மைந்தரோடு அந்தரம் இனி யாது கொலாம் ஐயா. (பா : 399) அந்தரம் நீளிதம்மா. (யுத் : 1241)
6. அழகிய உயர்வு. அம் தரம். அந்தரம் பார்க்கின் நன்மை அவர்க்கில்லை உன்க்கே ஐயா. (ஆ : 634)
7. நடுவு நிலைமை. அந்தரந் தீர்ந்துலகளிக்கும் நீர்மையால் தந்தையும் தியன். (அ : 157) அந்தரம் உணரின். (யுத் : 1597)
8. இடையூறு. பின்னரும் அந்தர முணர்ந்துனக் குறுவதாற்றுவாய். (யுத் : 1313)
9. இடம். போர்க்களம். அந்தரத்தார்த்து வந்தான். (யுத் : 1911)

**அந்தர மங்கையர்** - ஆகாயத்திலுள்ள தேவமாதர். அந்தர மங்கையர் வணங்கப் பரதனை வந்தடைந்தாளன்றே. (யுத் : 4147)

**அந்தர முனிவர்** - வானவெளியிற் செல்லும் ஆற்றலுடைய முனிவர். அந்தர முனிவரோடு அறிஞர் யாவரும். (அ : 935)

**அந்தரவான்** - மேலுலகம். அந்தர வானின்றும் விழ்வ. (அ; 56) (பா : பே] அந்தரவானத் தவரெல்லாம். (பா : 588)

**அந்தரவானம்** - இடைவெளியாயுள்ள வானம். அந்தரவான மெல்லாம் ஒத்த தன்னுருவேயாக்கி. (யுத் : 2381)

**அந்த வேலையில்** - அக்காலத்தில். அந்த வேலையில் திதி பெருந் துயருழந்தழிவாள் வந்து. (பா : 504)

**அந்தாக** - அப்படியே ஆக. தெலுங்குச் சொல். (சு 419) அந்தாக என்று வந்து ஐயனும் அமைவாயினன். (யுத் : 2992)

**அந்தாம நெடுந்தறி ஆயிரம்** - அழகிய ஒளி விளக்கம் வாய்ந்த ஆயிரந் தூண்கள். (ஆ : 715)

**அந்தி** – 1. மாலைக்காலம். அந்தி வந்தடைந்த தாயைக் கண்ட ஆன் கன்று. (அ : 289)

2. மாலைக் கடன். அந்தியை நோக்கினன். (அ : 777)

3. இரவு. அந்திதன் கைதர மந்தம் முந்த நடந்தது வாடையே. (அ : 1079)

**அந்திமாலை** - அந்திமாலைக் காலம். அந்திமாலை வந்ததுவே. (பா : 628)

**அந்தியாள்** - மாலைப்பொழுது. மாலைக்காலமாகிய பெண். அந்தியாள் வந்துதானணுக. (கி : 39)

**அந்தியின் கடன்கள்.** - மாலைக் கடன்கள். அந்தியின் கடன் களாற்றி. (யுத் : 4238)

**அந்தியை நோக்குதல்** - மாலைக்கடன் செய்தல். அந்தியை நோக்கினன் அறிவை நோக்கினன். (அ : 777)

**அந்தில்** - அவ்விடத்தில். அப்போது. அஞ்சனமெழுதி அந்திற் கற்பகம் கொடுக்க வாங்கி. (சு : 240) [பா : பே] அந்தில் வேளனங் கன் அழல்படந்துரந்த பகழி. (சு : 420) [பா : பே]

**அந்திவண்ணன்** - சந்தியா காலத்து நிறம் போன்ற நிறமுடையவன் ; இலக்குவன். (யுத் : 2087)

**அந்திவானகம்** - செக்கர் வானம், அந்திவானகங்கடுத்தது அவ்வளப்பரு மளக்கர். (யுத் : 560) (யுத் : 1160)

**அந்து** – அப்படியே. அந்தாக. (யுத் : 2992) அந்து செய்குவென். (யுத் : 3728).

**அந்தொக்க** - அந்த ஒக்க. (ஹந்த) அவர்களைப் போல. அந்த– அந்தோ. (உ. வி) அந்தொக்க அரற்றவோ நான். (யுத் : 3182)

**அந்தோ** - ஐயோ. இரக்கக் குறிப்பு. அந்தோ ஓ கொடிதே அறம் என்னும். (அ : 206) அந்தோ உன் திருமேனிக்கன் பிழைத்த வன்பிழையால். (ஆ : 339)

**அநங்கசாபம்** - மன்மதன் வில். இரண்டில்லை அநங்கசாபம். (கி : 798)

**அநங்கபாணம்** - மன்மதன் அம்பு. அநங்கபாணம் வந்து வந்து ரங்குடைந்து. (ஆ : 652) [பா : பே]

**அநங்கன்** - மன்மதன். ந அங்கன். ந— எதிர்மறைக் குறிப்பு. உருவில்லாதவன். அநங்கனும் அமரர் மற்றும் எற்பெறத்தவஞ் செய்கின்றார். (ஆ : 292)

**அநசூயை** - அந்திரி முனிவன் பன்னி. அழுக்காறு இல்லாதவள். அவன் அரும் பன்னி கற்பின் அனசூயை. (ஆ : 5)

**அநந்தம்** - எண்ணிறந்தமை. அளவிறந்தமை. ந அந்தம். அநந்த கோடி. (யுத் : 2021) (யுத் : 1009)

**அநந்தர்** - சிறுதுயில் மயக்கம். அநந்தரால் ஏடகம் பொதிதார் பொருந்திட. (அ : 242)

**அநந்த வெற்பு** - திருவேங்கடமலை. அப்புறத் துயர்ந்து தோன் றும் அதிதிகழ் அநந்த வெற்பு. (யுத் : 4094)

**அநந்தன்** - கீழிருந்து உலகங்களைக் காக்கும் நாகம். மன சினத்த அநந்தன். (யுத் : 662)

**அநாயம்** - அநியாயம். பொருவருந் திருவிழந் தநாயம் பொன்று வாய். (சு : 453) [பா : பே] உளதாம் ஆவி அநாயமே உகுத் தென் ஐய. (யுத் : 1359)

**அநிந்தனை அங்கி** - பழிப்புக்கிடமில்லாத அக்கினி தேவன். அநிந்தனை அங்கி நீ அயர்வில் என்னையும் முனிந்தனை யாமென முறையிட்டானரோ. (யுத் : 4009)

**அநுச்சை** - (அனுச்சை) இசைவு. அனுஞ்ஞா என்பதன் திரிபு. நற்றவர் அனுச்சை கொடு நன்மனை புகுந்தான். (பா : 1243)

**அநுசன்** - தம்பி. அயர்ப்பில் ஆற்றல் என் அனுசனை. (யுத் : 181)

**அநேகர்** - பலர். கோணர்ந்தளிக்கும் வானரவீரர் அநேகரால். (யுத் : 652)

**அப்பால்** - 1. இனி. அப்பால்....மாதவன் ஆணையிற் போனவர் கூற்றின் உற்றது கூறுவாமரோ. (அ : 792)
2. அப்பக்கம். அக்கரை. ஒருதானே ஏற்றினன் இனி தப்பால். (அ : 679)

**அப்பிடை** - நீர் இருக்குமிடம். அப்பிடை தேடி. (ஆ : 1099)

**அப்பினுள் அமுது** - பாற்கடலில் தோன்றிய தேவாமிர்தம் போன்று இனியவன். அப்பனை அப்பினுள் அமுதந்தன்னையே ஒப்பனை. (பா : 1313)

**அப்பு** - அம்பு என்பதன் விகாரம். 1. நீர். தண்ணீர். நெடுங்கண்கள் உகுத்த அப்பினால் நனைந்து. (சு: 337)
2. பாற்கடல். அப்பனை அப்பினுள் அமுதந்தன்னையே (பா: 1313)
3. நீர் நிலை. அப்புறத்தப்பினால் ஆடும். (யுத்: 134)

**அப்புடை அனிக வேலை** - அம்பு முதலிய போர்க்கருவிகளையுடைய சேனைக் கடல். அப்புடை அனிக வேலை அகன்புனல் முகந்து மாந்த. (பா: 1115)

**அப்புதல்** - 1. தோயச் செய்தல். (கலா) தெளித்தல். (வை. மு) சிதநீர் முகத்தின் அப்பி. (யுத்: 2856)
2. பூசுதல். கலவை அள்ளியப்ப. (யுத்: 10)
3. அணைத்தல். அப்புமாரி அழுதிழியாக்கையின் அப்பும். (யுத்: 3175)

**அப்புநீராடல்** - அம்பு என்று சொல்லப்படும் நன்னீரில் ஆடுதல். அப்பு நீராடுவான்போல் அருக்கனும் அத்தஞ் சேர்ந்தான். (யுத்: 709)

**அப்புமாரி** – 1. அம்பு மழை. அப்புமாரி அழுந்திய மார்பு. (யுத்: 3175)
2 நீர் மழை. அப்புமாரி அழுதிழி யாக்கை. (யுத்: 3175)
3. நீர் மிகுதி. எயினர் வாழ் சிறூர் அப்புமாரியின் இரியல் போகி. (பா: 25)

**அப்பு வேலை** - 1. அம்பு வேலை; அம்பு மயமான கடல்.
2 தண்ணீர்க்கடல். உப்பு வேலை யென்றுலகுறு பெரும்பழி நீங்கி அப்பு வேலையாய் நிறைந்தது. (யுத்: 567)

**அப்புறத்தண்டம்** - பகிரண்டம். புறத்தே உள்ள அண்டம். அப்புறத் தண்டத்தோர் என்றூர் சிலர். (ஆ: 588) (யுத்: 972)

**அப்புறத்தப்பு** - அண்டத்திற்கப்பாலுள்ள பெரும்புறச் கடலின் நீர். அண்டத்தைப் பொதுத்து அப்புறத்தப்பினால் ஆடும். (யுத்: 134)

**அப்புறழ் வேலை** - நீர்மிக்க கடல். அப்புறழ் வேலைகாறும் அலங்கு பேரிலங்கை. (சு: 1179)

**அப்புறு கடல்** - நீர் நிறைந்த கடல். அப்புறு கடல் ஞாலம். (அ: 715)

**அப்புறும் பாழிமாக் கடல்** - நீர்நிறைந்த வலிய பெரிய கடல். (பெரும் புறக்கடல்) ஆழிமால் வரைக்கப்புறத்து அப்புறும் பாழிமாக் கடல். (யுத்: 3863)

**அப்புறையுள்** - நீராகிய பள்ளிகொள்ளுமிடம்; பாற்கடல். உவந்துறையும் அப்புறையுள் துறந்து. (ஆ: 61)

**அபயதானம்** - அபயப்பிரதானம். அடைக்கலமளித்தல். ஆதலால் அபயமென்ற பொழுதத்தே அபயதானம் ஈதலே கடப்பாடு. (யுத்: 426)

**அபயம்** - 1. அடைக்கலம். அருளுடை வீர நின் அபயம் யாம் என்றார். (ஆ: 133)
2. அபயமுத்திரை. உள்ளங்கை வெளித்தோன்றுமாறு கையை மலர்த்தி ஐந்து விரல்களையும் மேல்நோக்கும்படி வைக்கும் நிலை. அருள் சுரந்த நோக்கினல் கஞ்சமலர்ப் பழிக்கும் கையபயங் காட்டினன். (யுத்: 292)
3. பயமில்லாதபடி காக்க வேண்டிய பொருள். அபயம் யாம் என்றிரந்தவர். (யுத்: 417)

**அபரம்** - யானையின் பின்னங்கால். உடலின் பின்புறம். முகங்களிற் புக்க வாளி அபரத்தை முற்றி. (யுத்: 1107)

**அபிடேகம்** - திருமஞ்சனம். நீராட்டல். விண்ணோர் எங்கள் நாயகனை வெவ்வேறெதி ரபிடேகஞ் செய்தார். (யுத்: 4311)

**அபிநயம்** - மனக்கருத்தைக் குறிப்பாய் விளக்கும் அங்கச் செய்கை. ஆனையை விளம்பித் தேரை அபிநயத்தியற்றி யுற்றார். (யுத்: 2784)

**அபிநவம்** - புதுமை. இராகவ அபிநவ கவிநாதன் (பாயி: 7)

**அபிமானம்** - 1. விரும்புதல். பற்று. அன்பு. பிரிந்த ஏதுகொல் பேரபிமானங் கொல். (ஆ: 1055) பித்தரும் இறை பொருத பேரபிமான மென்னும் சத்திரம். (யுத்: 2853)
2. தேகாபிமானம். பேரபிமானங்கள் உற்ற பெற்றியோர். (யுத்: 337)
3. அருள் நோக்கம். மாளாத நீதி நின்கண் அபிமானமில்லை கெடுவார்கள். (யுத்: 2208)

**அம்** - 1 அழகு. அம் சுவணத்தின் உத்தரியத்தாள். (சு: 174)
2. நீர். அம் சுவள் நத்தின் முத்தொளிர் ஆரம். (சு: 174)
3. சுவைமிக்க. அம் தண் புனல். (சு: 375)
4. ஆம் என்பதன் விகாரம். (வை. மு) அம்கங்கள் - கிடக்கின்ற சிரசுகள். (யுத்: 2932)

**அம்பரத்தின் நீங்கா அரசு** - வானுலகத்தின் நிலையான அரசு. அம்பரத்தின் நீங்கா அரசளித்த ஆழியாய். (அ: 1128)

**அம்பரத்தும்பர்** - ஆகாயத்தின் மேலிடம். அம்பரத்தும்பர் புக்கு. (யுத்: 94) [பா: பே]

**அம்பரம்** - 1. ஆகாயம். விண். வாணிமுந்தின பாணியின் பங்கி அம்பரம் எங்கும் விம்மின. (அ: 225) அம்பரங்கள் தொடுங் கொடி ஆடை. (யுத்: 3378)
2. தேவலோகம். ஊழிவாழ் அம்பரத்துள். (ஆ: 65)

3. மேகம். அம்பரம் அம்பரத் தேகலாற்றல. (யுத்: 574)
4. **அம்பாரம்.** அம்பரங்களொடுங் களி யானையும் (யுத்: 3378)
5. **கடல்.** அம்பரம் கம் அருங்கலம் ஆழ்ந்தென. (யுத்: 3378)
6. ஆடை. அம்பரம் செம்பொன். (யுத் 1172)

**அம்பரம் செம்பொன்** - பீதாம்பரம். (யுத்: 1172)

**அம்பர வேந்தன்** - இந்திரன். (சு: 351)

**அம்பரீடன்** - அயோத்தி மன்னன். புருடமேதம் செய்ய எண்ணி சுனச்சேபனை விலைக்கு வாங்கியவன். குதைவரிச் சிலை வாட்டானைக் கோமகன் அம்பரீடன். (பா: 683) (யுத்: 2621)

**அம்பலம்** - பலரும் கூடும்படியான இடங்கள். ஆடரங்குகள் அம்பலம் தேவராலயங்கள். (சு: 228)

**அம்பலி** - ஓர் இசைக் கருவி. (யுத்: 2397)

**அம்பு** - 1. நீர். கங்கை. அம்பரு அணிசடையரன். (பாயி: 3)
2. ஆயுதம். இறுதிக்கோர் அம்புய்க்கும் போர் வில்லி. (ஆ: 746. அம்பிட்டுத் துன்னங்கொண்ட புண்ணுடை நெஞ்சோடு. (யுத்: 1378) அம்புமாரி. (யுத்: 525) [பா: பே]

**அம்புதசாலம்** - மேகத்திரள். அள்ளல் வேலையும் அம்புத சாலமும் மேவு மெய் வள்ளல். (பா: 653)

**அம்புயத்தணங்கு** - திருமகள். அம்புயத் தணங்கின் அன்னார். (பா: 982)

**அம்புயத்தவன்** - பிரமன். (யுத்: 2738)

**அம்புயம்** - தாமரை. (பா: 982)

**அம்புருவப்படல்** - அம்பு உருவுமாறுபடுதல். • பாழிப்புயம் அம்புருவப் படலும். (யுத்: 2322)

**அம்புலி** - சந்திரன். அம்புலி அம்ம வாவென்றழைத்தலும். (யுத்: 3194)

**அம்புவாங்குதல்** - அம்புகளை எடுத்தல். வாயம்பு ஓர் ஆறு வாங்கி. (யுத்: 2375)

**அம்போருகம்** - தாமரை. நீரில் முளைப்பது. (யுத்: 241)

**அம்போருகன்** - பிரமன். அம்போருகனும் அரனும். (யுத்: 241)

**அம்ம** - 1. கேட்டற் பொருளைத் தழுவிவரும் இடைச்சொல். (கலா) அம்மா என்றழைத்தல். (வை.மு) அம்புலி அம்ம வாவென்றழைத்தலும். (யுத்: 3194)
2. ஆச்சரியம். அம்ம இது இது என அகலும் நீணெறி... சென்றனர். (பா: 224) •

**அம்மவோ** - அச்சத்தை உணர்த்தும் விளி. அம்மவோ செவ்வையில் துயில் நமைச் செய்தது ஈது என. (சு: 384)

**அம்மனை** - 1. அம்மா. தாய். அம்மனை நீ யாரென்றான். (ஆ : 340) எங்கள் வருந்துறு துயரந் தீர்த்தாய் அம்மனை வாழி என்றான். (ஆ : 1201) என் அம்மனை அழுத கண்ணள். (யுத் : 2358)
2. அம்மனை யாடுதல். செருமங்கைதன் செங்கையால் அம்மனைக் குலமாடுவ போன்றவே. (யுத் : 3379)

**அம்மா** - வியப்பிடைச்சொல். வேய் தெரிந்துரைப்ப போன்ற விலங்கொடு புள்ளும் அம்மா. (ஆ : 425) அருந்தவமுடையர் அம்மா அரக்கர். (யுத் : 446)

**அம்மி** - அரை கல். (பா : 1336)

**அம்மி மிதித்தல்** - மணமகள் பாதத்தைப் பிடித்து மணமகன் அம்மியில் வைப்பது. கல்லின் தன்மைபோலக் கற்பு நெறியில் உறுதியாக நிற்கவேண்டும் என்பதனை இது குறிக்கும் என்பர். இலங்கொளி அம்மி மிதித்து. (பா : 1336)

**அம்மை** - 1. தாய். அண்ணல் செய்கையும் அம்மை தீமையும் அறிதல் தேற்றினாள். (அ : 911)
3. மறுமை இன்பம். அம்மையும் உதவுதற் கமைய வேண்டுமால். (அ : 24)

**அமர்** - போர். கிட்டியது அமர் எனக் கிளருந்தோளினான். (அ : 1001)

**அமர்க்களம்** - போர்க்களம். யுத்தகளம். அமர்க்களத் தீயிடைக் குளித்த இலங்கை மாநகர் மாளிகை. (யுத் : 2450)

**அமர்த்துறை** – போர் அரங்கம். போர்க்களம். உங்களை அமர்த் துறைச் சிரங்கொய்து பொருத்தினால் அது பொருந்துமோ. (யுத் : 1549)

**அமர்த்தொழில்** – போர்த்தொழில். ஆங்கவன் அமர்த் தொழிற் கணுகினானென. (யுத் : 1070)

**அமர்தல்** - 1. பொருந்துதல். அண்ணல் அஞ்சனவண்ணனும் அமர் குறித்தமர்ந்தான். (யுத் 1187)
2. நெருங்கல். அமரப்புல்லி. (யுத் : 873)

**அமர்மேல்** – அமருக்காக. ஆரமர்மேல் இனி மதி கெடுந்தகையோர் வந்து. (யுத் : 743)

**அமரகண்டகர்** - தேவர்களுக்கு விரோதியான அசுரர். அமர கண்டகர் இடி நிகர் வினயமது இயம்பினனரோ. (பா : 188) [பா : பே]

**அமரர்** – தேவர்கள். மரணமில்லாதவர். அந்தரத்தமரர். (சு: 1045)

**அமரர் கோமான்** – இந்திரன். (யுத் : 441)

**அமரர்கோன்** - இந்திரன். (பா : 96)

**அமரர்கோன் நகரம்** - அமராவதி. இந்திரன் மாளிகை. ஆயிர கோடித் திண்டேர் அமரர்கோன் நகரமென்ன மேயவர். (யுத் : 2403)

**அமரரணங்கு** - தெய்வப் பெண். அமர ரஞ்சவ் வணங்கனையார். (பா : 844) [பா : பே]

**அமராபதி** - அமராவதி. ஒரு தனியே திரிந்து அமராபதி காத்தான். (பா ; 726)

**அமரேசர்** - தலைமைத் தேவர்கள். அவன் விற்ரொழில் அமரேசரு மறியார். (யுத் : 1822)

**அமரேசன்** - திருமால். அமரேசன் உந்தியின் உதவாமே உதவிடு தொழில் வல்லான். (அ : 711)

**அமலம்** - குற்றமற்ற தன்மை. அமலத்திண் கரம். (யுத் : 784)

**அமலன்** - குற்றமற்றவன். அன்னவன் உரைகேளா அமலனும் உரை நேர்வான். (அ : 685)

**அமலை** - 1. ஒலி. ஆரவாரம். ஆளியும் அரியும் அஞ்சி இரிதரும் அமலை நோக்கி. (ஆ : 426)
2. பேரொலி. விண்ணவர் அமலையே உயர்ந்தன் றமரில். (சு : 801)
3. கனைப்பொலி. புரவியின் அமலையும். (யுத் : 2496)

**அமளி** - படுக்கை. பள்ளியறை. தோழி சேருதும் அமளி என்றாள். (பா : 1161) (யுத் : 1230) (யுத் : 3584)

**அமிர்தம்** - 1. அமுதம். அமிர்த அஞ்சொல் அணங்கனையார். (பா : 844) அமிர்தமேனி. (பா : 1210) [பா : பே]
2. பால். அமிர்தச்சுரபி. (பா : 495)
3. உணவு. சுரந்தருள் அமிர்தம். (பா : 656)

**அமிழ்தம்** - பால். அமிழ்தன்றி நல்லதில்லை. (கி : 806)

**அமிழ்தல்** - 1. மூடுதல்.
2. ஆழ்தல். தாழ்தல். அமிழ் இமைத்துணைகள். (பா : 1204)

**அமிழ்து** - தேவாமிர்தம். தேனென்றோ அமிழ்தமொன்றோ. (யுத் : 434) அமிழ்தப்பாடல். (கி : 476) அமிழ்தமேனி. (பா : 1210) அமிழ்தினைச் சுவை செய்தென்ன அழகினுக் கழகு செய்தார். (பா : 1204) (ஆ : 722)

**அமுக்குதல்** - அழுத்துதல். அமுக்குவென் இன்னும். (சு : 86)

**அமுத உந்தி** - பாற்கடல். உண் ணமுதஉந்தியன ஒண்ணகர். (உ. வி) (பா : 910) [பா : பே]

**அமுதம்** - 1 பிணி, மூப்பு, இறப்பு நீக்கிக் களிப்புத்தருவது. அமுதம் இன்னும் எழும் எனும் ஆசையால். (யுத் : 661)
2. சாறு. மென்கரும்பாடிய அமுதம். (பா : 544)

3, நீர். ஊதைகள் சொரிவன உறையுறும் அமுதம். (பா : 28)
4. அமுதம்போன்ற இனிமை. அமுத இசை. (யுத் : 1581) அமுத ஏழிசை பாடினர். (பா : 288)

அமுதர் - தேவர்கள். அந்தணர் அமுதருண்டி அயில்வுறும் அமலைத்து எங்கும். (பா : 50)

அமுதருண்டி - தேவருணவாகிய அவிசு. (பா : 50)

அமுதிற்பிறந்தாள் - அமுதுடன் பிறந்தவள்; இலக்குமி. (யுத் : 299)

அமுது - 1. உப்பு. அள்ளல் ஓங்களத் தமுதின் பண்டியும். (பா : 85)
2. குழந்தையின் வாயூறல். மார்பிடை மாலைவாயமு தொழுகு மக்கள். (பா : 89)
3. உணவு; பால்; அமுதம். இருந்து பசியாலிடர் உழந்தவர் கள் எய்தும் அருந்தும் அமுதாகியது. (சு : 558)
4. தேவாமிர்தம். அமுதென்னும் மருந்து. (பா : 590) அமு திற் பிறந்தாளை. (யுத் : 293)
5. இன்பம்.

அமுதென்னும் மருந்து - அமுதமென்னும் சாவா மருந்து. (பா : 590)

அமை - மூங்கில். அமை வனம். (யுத் : 572) அமை உருக்கொண்ட கூற்று. (யுத் 1866) அமைத்திரள் கொள் தோளியர். (பா : 1230)

அமைச்சர் - அருகிலிருந்து ஆலோசனை கூறுவோர். அரக்கனும் ஆங்கணோர் அமைச்சர் நால்வரும். (யுத் : 321)

அமைத்தல் - 1. படைத்தல். உலகேழும் அமை எனின். (சு : 711)
2. உபசரித்தல். விருந்தவண் அமைத்தபின். (ஆ : 166)
3. தடுத்து நிறுத்தல். அமைப்பருங்காதல். (பா : 95)
4. சேர்த்தல். ஆழ்திரை ஆற்றின் நீரோடு அமைத்தி இன்று. (யுத் : 4308)

அமைதல் - 1. மனம் பொருந்துதல். உடன்படல். இணங்குதல். நீர் அம்மையும் உதவுதற்கமைய வேண்டுமால். (அ : 24) நீர் அமைதிராம் என்றான். (அ : 1004) அமைவாயினான். (யுத்: 2992)
3. மூடியிருத்தல் - நயனங்கள் அமைய நேமி வாளங்கள் உறைவ. (ஆ : 228)
4. வல்லமையுடைத்தாதல். அலைகடல் பருகவும் அமைவான். (யுத் 494)
5. தன்மை. ஏவல் செய்யும் அமைதியின். (ஆ : 266)
6. அடங்குதல். சொரிவமைப்பதரிதாய மழைக் கண்ணாள். (யுத் : 4148) அரி எதிர்ந்து அமைதி என் என்றலும். (கி : 182)

7. தோன்றிப் பெருகுதல். பிணத்தோங்கற் கோடமைந்த வெங்குருதி நீரா றுகள். (யுத் : 1541)
8. செய்து நிறைவேற்றுதல். தரையினை எடுமெடும் என்றால் ஒருவர் அது அமைதல் சமைந்தார். (சு : 767) அமைக நின் கரும மென்று வாழ்த்தினர். (யுத் ; 2698)
9. உரிய தன்மை அமைந்து நிற்றல். முளையமைதிங்கள். இளை யமை புவனம் மூன் றும். (யுத் : 1234)
10. தொடங்குதல். நான் மறை முதலிய ஓதுவான் அமைந்தான். (யுத் : 151)
11. மனம் அமைதியுறுதல். உள முருகித்தான் அமைந்து இரு தடக்கையுந் தலைமிசைத்தாங்கி. (யுத் : 153)
12. ஆயத்தமாயிருத்தல். நீர் அமைதிராம் என்றான். (அ : 1004)
13. ஏற்றதன்மை. தகுதி. அமைவிருந்து. (அ : 643)

அமைதி – 1. நிறைவு. (அண்)
2. இடம். (வை.மு) அருந்தவன் இருந்த அமைதிப் பத்திரப் பழு மரப்பொழில் துவன் று பழுவம். (ஆ : 2)
3. ஆற்றல். தகுதி. அகலிட முழுதாளும் அமைதியை. (அ : 713)
4. செய்தி. ஆனவன். அமைதி வல்லை அறிகென அருளின் வந்தேன். (கி : 618)
5. நிலைமை. தருமத்தின் அமைதி உன்னுவான். (கி : 669)
6. தன்மை. ஆளும் நன்னெறிக் கமைவரும் அமைதியின்றாக. (அ : 67) (ஆ : 266)
7. ஏற்பாடு. என் ஆணையால் ஆனதோர் அமைதியின் அளித்தி பார். (அ : 1197)
8. சமயம். பொழுது. யான் வரும் அமைதியில் இது செயல் எவனோ. (ஆ : 112)
9. சுகம். ஐந்தும் ஐந்தும் அமைதியின் ஆண்டு அவண் மைந்தர் தீதிலர் வைகினர். (ஆ : 143)
10. காரணம். அமைதி என் என்றலும். (2. வி) (கி : 182)
11. அடக்கம். அமைதி நன்றெனா. (கி : 701).
12. உட்கொள்ளுதல். அன்றினீ அடுவல் என்று அமைதியாமெனின். (யுத் : 2437)
13: சுருதி. (கலா) இலக்கண அமைதி. (அண்) அமைதி கூடுவார். (சு : 120)

அமைதி கூடுவார் – சுருதிகூட்டுவார். (கலா) இலக்கண அமைதியுடையார். (அண்) (சு : 120)

அமைப்பது – வேறாகச் செய்வது. (வை.மு) புரியக்கூடிய செயல். (கலா) அமைப்பதென் பிறிது. (யுத் : 347)

அமைப்பருங்காதல் – தடுப்பதற்கரிய ஆசை. அமைப்பருங் காதல் முன்பிடித்துந்த. (பா : 95)

அமையக் கேட்டல் - உளத்திற்பதியுமாறு கேட்டல். அவ்வுரை அமையக் கேட்ட வீடணன். (யுத் : 3062)

அமைவு - 1. அமைதல். அமைவு அருமேனியான். (பா : 1318)
2. சால்பு. ஆதிம் மதியும் மருளும் மறனும் மமைவும். (பா : 169)
3. தகுதி, பொருத்தம். இந்திரற்கு அமைவர எடுத்த மனேயின் மாட்சிய என்னின். (சு : 102) அமைவரும் புவனமூன்றில். (யுத் : 1631)

அய்யவன் - அய்யன் என்பதன் விகாரம். இராமபிரான். அய்யவன் ஆக்கை தன்மேல் விழுந்து. (யுத் : 2173)

அய்யன் - ஐயன். யாவர்க்குந் தலைவனான இறைவன். (கலா) (யுத் : 646)

அய்யுறவு - ஐயுறவு. சந்தேகம், அய்யுற வெல்லாந்தீரும் அளவை யாயமைந்த தன்றே. (யுத் : 427)

அயக்கல் - அசைத்தல். அசக்கல். சகர யகரப் போலி. குன்றுகள் அயக்கலின். (யுத் : 629)

அயங்கெழு வேள்வி - குதிரைகளைக் கொண்டு செய்யப்படும் அசுவமேத யாகம். (அ : 846)

அயம் - குதிரை. அயங்கெழு வேள்வி. (அ : 846) அயமகம். (பா : 512)

அயமகம் - அசுவமேத யாகம். (பா : 512)

அயர்த்தல் - 1. செய்வதறியாது சோர்தல். கண்ணின் நோக்கும் அயர்க்கும். (அ : 240)
2. மறத்தல். அந்நாள் முதல் யானும் அயர்த்திலனாகும் என்றாள். (ஆ : 711) அயர்த்திலன் இராமநாமம். (யுத் : 2667) நீயும் அயர்த் தனையாகுமன்றே. (கி : 625) அயர்த்துநோக்கினும் தென்றிசை யன்றி வேறறியான். (யுத் 4114)
3. உயிர் ஒடுங்குதல். அயர்த்தனன்கொல் என்றஞ்சினர். (யுத் : 2592)

அயர்தல் - 1. தளர்தல். மனந்தளர்தல். உணர்வழிதல். அன்ன வன் மகவிலாது அயருஞ்சிந்தையான். (பா : 368)
2. வருந்துதல். துயருழந்தயரல். (அ : 1182)
3. மயங்கல். (அண்) வீழ்ந்தார் அயர்ந்தார். (அ : 379)
4. மறத்தல். திண்மை அலமரச் செய்யலாமோ அறிந்திருந் தயர்ந்துளார்போல். (கி : 314)
5. செய்தல். அணை இன்றி அயர்ந்த வென்றி அஞ்சினார். (யுத் : 1377)
6: மெலிதல், அயரும். (யுத் : 143)
7. மூர்ச்சித்தல். சிந்தை அறிந்த மைந்தனும் அமர் நெடுங்களத் திடை அயர்ந்தான். (யுத் 1168)

**அயர்ப்பு** – தளர்ச்சி. அயர்ப்புச் சென்ற (மிக்க) நெஞ்சினன் நெடிது நின்ருன். (கி : 617)

**அயர்வு** – சோர்வு; தளர்ச்சி. அயர்வு தீர்ந்தினைய பேசும். (ஆ: 993) அயர்வுற்றேன். (ஆ: 732) நீ இனி அயர்வாயல்லை. (கி : 382) உணர்வு வந்தயர்வு நீங்கினன். (யுத் : 474)

**அயர்வுயிர்ப்பு** – நெட்டுயிர்த்தல். பெருமூச்சு. அண்ணலுஞ்சிறிதுணர்வினெடு அயர்வுயிர்ப்பு அணுக. (யுத் : 2597) அனந்தனும் தலைகளேந்தி அயர்வுயிர்த்து அவலந்தீர்ந்தான். (யுத் : 3486)

**அயல்** – 1. புறம்பு. அயலப்பால் வேறு சென்ற நெறிகாணர். (அ : 614)
2. பக்கம். சமீபம். நெடுங்கண் அயில் வீசிஅயல்பாரா. (ஆ : 261) படிமேல் அயல்சூழ் பொன்னிற் பொலிவார். (ஆ : 76)
3. அந்நியம். அந்நியன். அயலைப்பற்றித் துணையமைந்தாயெனின். (கி : 321)
4. மனம் வாக்குக்கு எட்டாதது. வந்த முறையால் ஆனந்தமென்னும் அயலென்னும். (யுத் : 2207)

**அயன்** – 1. பிரமன். அயனுலகம் கன்னி மீடலும். (பா : 483)
2. தசரதன் தந்தை. அயன் புதல்வன் தயரதன். (பா : 733)

**அயன்பதி** – பிரமலோகம். (சு : 383 a)

**அயனம்** – வழி. அருக்கனுக்கவ்வழி அயனமில்லை. (கி : 670)
2. செல்கை. வடதிசை அயன முன்னி வருவதே கடுப்ப. (யுத் : 4083)

**அயா** - வருத்தம்.

**அயாவுயிர்த்தல்** – பெருமூச்சுவிடுதல். அருமையின் உயிர்வர அயாவுயிர்த்தகம் பொருமினன். (அ : 1124)

**அயாவுயிர்ப்பு** – துயர் நீக்கம். தளர்ச்சி நீக்கம். இளைப்பாறுதல். உள்ளத் தயர்வுறும் மதுகை மைந்தர்க்கு அயாவுயிர்ப்பு அளித்ததம்மா. (அ: 1048)

**அயிந்திர நிறைந்தவன்** - இந்திர வியாகரணத்தில் வல்லவனை அனுமான். அயிந்திர நிறைந்தவன் ஆணை ஏவலால். (யுத் : 348)

**அயிந்திரம்** – இந்திரனல் தோற்றுவிக்கப்பட்ட வியாகரணம். (யுத் : 348) அயிந்திரப் பரவை. (யுத் : 2547)

**அயிந்திரவாய்** - இந்திரனைத் திக்குப்பாலகனகக் கொண்ட இடம்; கிழக்கு. அயிந்திரவாய் முதல் துன்னுபோர் கண்ட தூதுவர் ஓடினர். (யுத் : 1044)

**அயிர்** – 1. கண்டசருக்கரை. அயிருந்தேனும் இன்பாகும். (பா : 86)

2. நுண்மணல். அயிருக்கண நெடுமால் வரை. (யுத்: 1136)
3. நுண்மை. அயிரா இமைப்பின் ஓராயிரங் கூறிட்ட செயிரின் ஒரு பொழுதின். (யுத் 297)
4. கருமணல். அயிருறக் கலந்த நன்னீர் ஆழி. (ஆ : 666)
5. ஐயம். அயிருற இமைப்பன. (பா : 121)

அயிர்த்தல் - ஐயுறல். அழுந்தும் இச்சரம் எய்தவன் யார்கொல் என்று அயிர்க்கும். (கி : 298) அயிராது உடனே அகல்வாயலையோ. (கி : 500) உயிர்தோறுமுற்றுளன் என வுரைக்கும் அயிராநிலை யுடையானிவன். (யுத் : 3033)

அயிர்ப்பு - சந்தேகம்; ஐயம். அயிர்ப்பில் சிந்தையான். (யுத் : 340) அயிர்ப்பில் ஆற்றல். (யுத் : 181) எம்வயின் அயிர்ப் புண்டாங்கொலோ. (யுத் : 81)

அயிராபதக் களிறு - ஐராவத வேழம். (யுத் : 2560)

அயிராவதக் களிறு - ஐராவத யானை. (பா : 486)

அயில் - 1. வேல். அயில் சிலைக்குலிசம். (சு : 420) அயில் கொள் கண். (பா : 608)
2. கூர்மை. அயிலெயிற்றரக்கன். (சு : 12) அயிலெயிற்று வெம் புலிக்குழாம். (சு : 338) அயில் தொகை மிடற்கழுவோடே. (ஆ : 6) அயின்முகப் பகழி. (யுத் : 776)

அயில் தொகை - கூர்மையின் தொகுதி ; மிக்க கூர்மை. (ஆ : 6)

அயில்வு - ஊண். மான நோயினுல் அயில்விலன் ஒரு பொருள். (ஆ : 1132)

அயிலுடைச் சுரிகை - கூரிய கத்தி. அயிலுடைச் சுரிகையால் அருகு தூக்கறுத்து. (அ : 783)

அயிலுதல் (அயில்தல்) - 1. உண்ணுதல். அயின்றனெ கிழங்கும் காயும். (யுத் : 1032) அசுரரை உயிரை அயின்றூர். (சு : 765)
2. சிதைத்தல். குன்றுரு அயிலும் நாம வச்சிரப்படை. (கி : 301)

அயிற்படை - வச்சிரப் படை. அற்றை நாள் அவன்தான் விட்ட அயிற் படை அறுத்து. (யுத் : 778)

அயிறல் - உண்ணுதல். (யுத் : 1284)

அயிறலைத் தொடர் - 1. அயில்தலைத் தொடர். வேற்படை தலை மையாகப் பொருந்திய. அயிறலைத் தொடர் அங்கையன். (யுத் : 1284)
2. அயிறலை தொடர். உண்ணுவதை மேற்கொண்டு. அயிற லைத் தொடர் அங்கு அகல்வாயினன். (யுத் : 1284)

அயினி - 1. சோறு. பூவும் பூசிற அயினியும். (சு : 1030)
2. செஞ்சோறு. போதொடு அயினிநீர் சுழற்றிப் போற்றினர். (பா : 614)

**அயினிநீர்** – செஞ்சோற்றொடு கலந்த நீர். ஆலத்தி. ஆலத்திநீர். (பா : 614) மந்திரத்தயினி நீரால் வலஞ்செய்து காப்புமிட்டார். (யுத் : 3966)

**அயினிநீர் சுழற்றுதல்** - ஆலத்தி எடுத்தல். இது கண்ணூறு அச்சம் முதலியவற்றால் உண்டாம் கேடுகளைக் களைவது. (பா : 614)

**அயுதர்** - பதினாயிரவர், அயுதம் பதினாயிரம். அறனின் மைந்தர் ஆறயுதர். (பா : 511) [பா : பே]

**அயோத்தி** - கோசலநாட்டின் தலைநகர். (போரிடுதற்கு முடியாதது) அவ்வுலகத்தோர் இழிவதற்கருத்தி புரிகின்றது அயோத்தி மாநகரம். (பா : 93) அயோத்தி மூதூர். (அ : 665 a) அயோத்தியாள். (பா : 133)

**அர்** - சாரியை. எளிதரோ. (யுத் : 1559)

**அர** - அரா என்பதன் குறுக்கம். பாம்பு. உள்வாழ் அரக்கொடெழு திண்கலுழன். (சு : 84)

**அரக்கன்** - (ஆ : 665) அரக்கனார். (சு : 315)

**அரக்காம்பல்** – செவ்வாம்பல். அரசன் ஒதுங்கத் தலையெடுத்த குறும்பு போன்றதரக்காம்பல். (பா : 638)

**அரக்கு** - 1. செம்பஞ்சுக் குழம்பு. நின் சில்லரக்குண்ட சேவடிப் போது. (அ : 518)

2. சாதிலிங்கம். ஊட்டரக் குண்ட போலும் நயனத்தான். (சு : 926)

3. செந்நிறம். அரக்குற்றெரி பொறிக்கண் திசைக்கரி. (யுத் 1127) அரக்காம்பல். (பா : 638)

4. செவ்வரக்கு. பொங்கரக்கு விழியோர் புடைசூழ. (யுத் 814)

**அரக்குதல்** - 1. அழுந்துதல். தைத்தல். வருத்துதல். கல்லரக்கும் கடுமைய அல்ல நின் சில்லரக்குண்ட சேவடிப் போது. (அ : 518)

2. அழித்தல். (வை. மு) கல்லரக்கும் கரதலம். (சு : 325)

**அரக** - அரங்க, அழிய. அரக முந்தின நெடுங்கவியின் ஆக்கையில். (யுத் : 2294)

**அரங்க** – 1. வருந்த. கண்ணரங்க கண் – தமிழுபசர்க்கம். (யுத் : 3338)

2. சிதைய. கெட. பிணியரங்க வினையகலப் பெருங்காலம் தவம் பேணி. (பா : 722)

3. அழுந்த. அம்பு அரங்க. (யுத் : 3378)

**அரங்க அரங்கு** - நீரிடைக்குறையில் அமைந்த நாடகசாலை. அரங்க அரங்கு தகர்ந்துக. (சு : 717)

**அரங்கம்** - 1. உடலிடம். பணியரங்கப் பெரும்பாயல் பரஞ் சுடரை. (பா : 722)
2. உள்ளிடம். அணியரங்கந்தந்தானே. (பா : 722)

**அரங்கிடந்தன** - அரங்கு இடந்தன. போர்க்களத்தில் அறுத்து வீழ்த்தப்பட்டன. அரங்கிடந்தன அறுகுறை நடிப்பனவல்ல. (யுத் : 1537)

**அரங்கிலாடுவார்** - நர்த்தனஞ் செய்பவராகிய சிவபெருமான். (யுத் 119)

**அரங்கு** – 1. சபை. அரங்குறு துறக்க நாட்டுக்கு அரசெனலாய தன்றே. (கி : 427)
2. மாளிகை. ஆடரங்கல்லவே அணியரங்கு அயலெலாம். (பா : 1146)
3. ஆடுமிடம். நிருத்தசாலை. நாட்டிய அரங்கு. ஆடரங்கல்லவே. (பா : 1146) ஆடரம்பை நீடரங் கூடுகின்ற பாடலால். (ஆ : 65) மணியரங்கு. (யுத் : 1666)
4. நாடகசாலை. தாமரங்க அரங்கு தகர்ந்துக. (சு : 717)
5. ஆற்றிடைக் குறை. அரங்க அரங்கு. (சு : 717)
6. போர்க்களம். அரங்கு இடந்தன. (யுத் : 1537)

**அரங்குதல்** - 1. அழிதல். அழித்தல். வெங்கடகரிக் கோடரங்கிட. (பா : 1146)
2. வருந்துதல். (உ. வி) (பா : 1146)
3. ஒழிதல். பிணி அரங்க. (பா : 722)
4. அழுந்துதல். நிலமரங்கிய வேர். (யுத் 678)
5. தோற்கடித்தல். மஞ்சரங்கிய மார்பிலும் தோளிலும். (யுத் : 3835)
6. சிதைத்தல். வெஞ்சரங்கள் நெஞ்சரங்க வெய்யகாமன் எய் யவே. (பா : 798)
7. பதித்தல். மணியரங்கு அம் நெடுமுடியாய். (பா : 722)

**அரங்கொண்ட கருங் கடல்** - பாதாளம் வரையில் ஆழ்ந்துள்ள கரிய கடல். (யுத் : 1579)

**அரசமாதவன்** - ராஜரிஷி. அரசமாதவன் நீ ஆதி. (பா : 682)

**அரசர்க்கரசு** - சக்கரவர்த்தி. அருளக்கருதிற்றிதுவோ அரசர்க் கரசே என்னும். (அ : 327)

**அரசவன்னம்** - ராஜஹம்சம். பயில் சிறை அரச அன்னம். (பா : 45)

**அரச வீதி** - ராஜ வீதி. (அ : 501)

**அரச வேலை** - கடல்போன்ற அரசர் கூட்டம்; அரசர்களாகிய கடல். அரச வேலை சூழ்ந்து அழுது கை தொழ. (அ : 917) (அ : 1160)

அரசவை – ராஜ சபை. அவ்வயின் அரசபை நின்றும். (அ : 454)

அரசில் வையகம் - அரசன் இல்லாத உலகம். மன்னன் இல்லாத நாடு. வள்ளுறு வயிரவாள் அரசில் வையகம். (அ : 940)

அரசிளங்குமரன் - ராஜகுமாரன். அரசிளங்குமரனே யாகல் வேண்டுமால். (பா : 621)

அரசிளங்கோளரி - இளமையான வலிய ஆண்சிங்கம் போன்றவன். (அங்கதன்) (கி : 590) சத்துருக்கன். (அ : 880)

அரசுமாற்றுதல் - ஆட்சியை மாற்றுதல். அதிகாரஞ் செலுத்தல். வன்றிறல் யமனையும் அரசு மாற்றுவார். (யுத் : 483)

அரசே அரசே - அரசனே அரசனே. முறையீட்டைத் தெரிவிக்க இரண்டு அடுக்கிற்று. (வை. மு) அறிவோ வினையோ என்னும் அரசே அரசே என்னும். (அ : 326)

அரஞ்சுடச் சுடர் நெஞ்சன் – அரம் தாக்க (அஞ்சாது மகிழ்ச்சியால்) விளங்குகின்ற நெஞ்சை யுடையவன். மாற்றார் படைக் கலத்திற்கு அஞ்சாதவன். அரஞ்சுடச் சுடர் நெஞ்சன் அரக்கர் கோன். (யுத் : 3861)

அரஞ்சுடர்வேல் - அரத்தினால் அராவி ஒளி வீசப்பெற்ற வேல். அரஞ்சுடர் வேல் தனது இளவல். (சு : 981)

அரஞ்சுடு குலிசவேல் - காய்ச்சி அரத்தினால் அராவப்பெற்றுள்ள வச்சிரப்படை. அரஞ்சுடு குலிசவேல் அமரர் வேந்தன். (யுத் : 3430)

அரண் - 1 புகலிடம். காண்பதோர் அரண் பிறிது இல்லென. (யுத் 360)

2. பாதுகாப்பான இடம். அஞ்சி அரண்புக்குப் பதுங்கினான். (யுத் : 950)

3. இரட்சகன். அரண் உனக்கு ஆவென் வஞ்சி அஞ்சல். (யுத் : 422)

அரண்டு – அஞ்சி. அரண்டு அருகுஞ்செறி அஞ்சன புஞ்சம். (ஆ : 1073)

அரணம் - 1. பாதுகாப்பான இடம். அவன் எயிறதுக்குமேல் அந்தகற்கு மோர் அரணமில்லையால். (கி : 144) வெவ்வேறு அரணங்களும். (சு : 63) (யுத் : 2743)

2. மதில், அகழி முதலிய உள்ள பாதுகாப்பான இடம். வேறோர் அரணம் புக்குறைதல் நோக்கி. (சு : 30)

3. அரண். (இலக்) பெருந்தடை. (வை. மு) கரணம் என்று உன்னை வந்தறிவு காணுமே அரணம். (யுத் : 4026)

4. சரணம். (உ. வி) அரணமல்லவர்க்கிவை கடந்தறிவரிதாக. (யுத் : 4026)

5. மதில். (வை.மு) அவ்வளவகன்றது அரணம் அண்டமிடை யாக. (சு : 159) [பா : பே]

**அரணி** - தீக்கடை கோல். அரணி தன்னுல் தீதற இயற்றி. (ஆ : 1033) [பா : பே]

**அணியன்** - சரண்யன். சரணமடைந்தவரைப் பாதுகாப்பவன். அரணியன் என்று அவற்கன்பு பூண்டனே. (யுத் 308)

**அரத்த ஆடை** – செவ்வாடை. இராவணன் அரத்த ஆடையன். (சு : 369)

**அரத்தஆம்பல்** - செவ்வாம்பல். அரத்த ஆம்பல்கள் பகலிடை மலர்ந்ததோர் பழனம் போன்றவே. (அ : 475)

**அரத்தப் பங்கிகள்** - செம்பட்டை மயிர். அரக்கர்கள் அரத்தப் பங்கிகள் செந்நிறங்கோடலின். (யுத் : 1065)

**அரத்தம்** - 1. செந்நிறம். அரத்த முண்டனைய மேனி அகலிகை. (பா : 1152) (சு : 369)

2. குருதி. பொங்கு அரத்தம் விழிவழிப்போந்துக. (ஆ : 389)

3. இரத்தத்துளி. நீளரத்தங்கள் சிந்தி. (ஆ : 724)

4. செவ்வாம்பல். [அரக்தகம்] அரத்தச் செவ்வாய். (யுத் : 2787)

**அரத்தவேல்** - குருதிதோய்ந்த வேல். வாள் அரத்தவேல் வண்டொடு கெண்டைகள் மயங்க. (அ : 54)

**அரந்தின்னுதல்** - அரம் அறுத்தல். வெவ்வரத்தின்று அயில் படைக்கும் சுடர் வேலான். (பா : 245)

**அரந்தை** – துன்பம். அரந்தையுற்றவன். (பா : 529) அரந்தை வெம் பிறவி யென்னுேய்க் கருமருந்தனைய ஐயா. (கி : 357) அரந்தைய ளாகுமன்றே. (யுத் : 1652) அரந்தையாம் பகை. (யுத் : 4047)

**அரம்** - 1, பாதாளம். அரங்கொண்ட கருங்கடல். (யுத் : 1579)

2. ஒருவகைப் படைக்கலம். அரமும் கல்லும் வேல் முதலிய அயிற்படை யடக்கி. (யுத் : 3504)

3. ஆயுதங்கள் அராவும் ஒரு வாள் விசேடம். அரஞ்சுடர் வேல். (சு : 981)

4. முட்கள். வெவ்வரம் பயில் சுரம். (அ : 444)

**அரம்பை** - அருணன் மனைவி. (ஆ : 205)

**அரம்பைமார்** - தேவமகளிர். (பா : 668)

**அரம்பையர்** - தேவமகளிர். (பா : 956)

**அரம்பொருதல்** - அரத்தினுல் அராவப்படுதல். தாம் அரத்தாற் பொராத் தகைகொள் வாட்படை. (யுத் : 3827)

**அரமகளிர்** - அமர மகளிர் என்பதன் விகாரம். அரம்பை மகளிர் என்பதன் விகார மெனவும்படும். அரமகளிர் அமுத இசை பாடினர். (யுத் : 1581)

அரமடந்தையர் - தேவமாதர். அரமடந்தையர் கற்பகம். (பா: 493)

அரமியத்தலம் - நிலாமுற்றம். அரமியத்தலத்தினும் அலர்ந்த. (அ: 54) (சு: 100)

அரமியம் - நிலாமுற்றம். [ஹர்மியம்] மேன்மாடம். (அ: 54) (சு: 1056)

அரவக்கழல் - ஒலிக்கின்ற வீரக்கழல். அறையரவக்கழல். (யுத் 2821)

அரவச்சரி - பாம்புகளாகிய வளையல். ஙீளரவச்சரி தாழ்கைநிரைத் தாள். (ஆ: 1085)

அரவத்தொல் கடல் - 1. அரவத்தையுடைய பழைய கடல். 2. அரவமாகிய பழைய கடல். (யுத்: 468)

அரவப்போர் மேகம் - இடியொலியைக்கொண்ட மேகம். அரவப் போர் மேகமென்ன ஆலித்த. (யுத்: 4288)

அரவம் - 1. ஓசை. பேரொலி. அரவ மாக்கடல். (யுத்: 730) (பா: 422) (பா: 423)

2. பாம்பு. தோலுகுத்தாலென அரவத்தொல் கடல். (யுத்: 468)

அரவம் எட்டு - அஷ்டமா நாகங்கள். அவையாவன:— வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன். கதத்தரவம் எட்டும் வலக்கயிறு கட்டியது. (யுத்: 3648)

அரவிந்தம் - தாமரை. அரவிந்த மலருள் நீங்கி. (ஆ: 283)

அரவிந்தராகம் - பத்மராக ரத்தினம். கோங்கம் அரவிந்தராகம். (ஆ: 655)

அரவின்நாமப்படை - நாகபாசம். நாகரத்தினம். அரவின் நாமத்து ஒரு தனிப்படையை உன்னி. (யுத்; 2138)

அரவின் பாசம் - நாகபாசம்.

அரவினதரசன் - ஆதிசேடன். (சு: 21)

அரவினதரசு - ஆதிசேடன். (சு: 667)

அரவு - 1. ஆயில்ய நட்சத்திரம். அளைபுகும்அரவினொடு அலவன் வாழ்வுற. (பா: 286)

2. நாகாத்திரம். அரவுகொண்டசைப்ப. (யுத்: 2431)

அரவுரி - பாம்பின் சட்டை. அரவுரி அமை தொறுந் தொடக்கித் தடங்கள் தோறும் நின்றுடுவ. (அ. 740)

அரற்றல் - புலம்பல். வாய்திறந்தரற்றலுற்ருள். (யுத் : 1617) அரற்றினுன். (யுத் : 1886) நீ எடுத்தரற்றல். (யுத் : 1640) ஆகுலித்து அரற்றுவானே. (யுத் : 2165) அரற்றி (யுத் : 2818) அரற்றினரரோ (யுத் : 1949) அரற்றுகின்றவர். (யுத் : 4002) அரற்றும் கொள்கையான். (யுத் : 4006)

அரன் - 1. சிவன். அரன் அதிகன். (கி : 766) (யுத் : 941)
2. விபீடணன் மந்திரியருள் ஒருவன். அனலனும் அனிலனும் அரன் சம்பாதியும். (யுத் : 120)

அரன் நிகர்வரத - சிவபிரானை ஒத்த முனிவரே. (பா : 764)

அரா - பாம்பு. உள் வாழ் அரக்கொடெழு திண்கலுழன். (சு : 84) மூரிவெஞ்சிலை இராவணன் அராவென முனிந்தான். (யுத் : 1201)

அராகம் - 1. பொருள்கள் மேல் தோன்றும் பற்றுள்ளம். மொய்யாகம் நிரம்ப. (அ : 219)
2. ஆசை. வேட்கை. வெம்பு அராகம் தனி விளைந்தமெய்யினுள். (ஆ : 233)
3. பூசுவது. சந்தனச் சுண்ணம். மெய்யராாகம் அழிய. (பா : 1032)
4. சிவந்த நிறம். செம்பராகம்படச் செறிந்த கூந்தலாள். (ஆ : 233)

அராப் பிள்ளை - பாம்புக்குட்டி.

அராவணை - அரவணை. பாம்புப்படுக்கை. தாம் அராவணை துறந்து தரை நின்றவரை. (ஆ : 31) (பா : 1291) அராவணைப் பள்ளியான். (சு : 119)

அராவுதல் - 1. தீட்டுதல். அராவரும் பகழி. (யுத் : 4111)
2. வருந்துதல். மெய்யராவி. (அ : 288)

அரி - 1. நெருப்பு. வசு அரிவதிந்த இவ்வனம். (பா : 383)
2. அக்கினிதேவன். அரியுமற்றெனது கூறு நீலன் என்றறைந்திட்டானல். (பா : 206)
3. அறுத்தல். அரிவாளால் அரிதல். அரிந்தான் முன்னோர் மன்னவனன்றே அருமேனி. (அ : 928)
4. அரியப்பட்ட நெற்பயிரின் கற்றை. எரிதரும் அரியின் சும்மை எடுத்து வானிட்ட போர்கள். (பா : 52)
5. செம்மை நிறம். செவ்வரி. (கலா) அரிமலர்ப்பங்கயம். (கி : 8)
6. மென்மை. வீயரித்தளிர் மெல்லணை. (பா : 644)
7. கோடுகள். இரேகைகள். அரிமலர்த் தடங்கண் நல்லார். (பா : 881)
8. வண்டுகள். தெள்ளரி பாண்டி பாணி. (பா : 883)

9. திருமால். (அரி - அடியார் துயரை அழிப்பவன்) ஆதலால் அரிக்கு ஆகண்டலன் தனக்கு ஓது கீர்த்தி யுண்டாயது. (பா: 403)
10. இந்திரன். அரிப்பெரும் பெயரவன் முதலினோர். (கி: 450)
11. குதிரை. அரிமகம். பா: 260)
12. அரங்கு. அடியேன்தானும் அரிக்குலத் தொருவன். (கி: 70)
13. சிங்கம். பாயரித்திறலான். (பா: 1036) அரிபடு சீற்றத் தான். (சு: 746)
14. தவளை. பல்லரி நல்லறிவாளரின் அவிந்த நாவெலாம். (கி: 558)
15 பரல். பருக்கைக் கல். மெல்லரிக்குரல் மேகலை. (கி: 610) தாளரிச் சதங்கை. (யுத்: 1191)
16. பகை. அரிவென்ற வெற்றியாற்றன் மாருதி. (யுத்: 789)
17. அரிசி. போய்த்தாழ் செறிதசை அரிசிந்தினபடி பொங்க. (சு: 967)

அரிக்குலம் - குரக்குக் கூட்டம். அள்ளிமீதுலகை வீசும் அரிக் குலச்சேனை நாப்பண். (யுத்: 439)

அரிகுநர் - அறுவடை செய்வோர். (அ: 813)

அரிச்சதங்கை - பரலிட்ட சதங்கைகள். (யுத்: 3193)

அரிசுமந்த பீடம் - சிங்கஞ்சுமந்த தவிசு. வியனரி சுமந்த பீடத்து. (அ: 285)

அரித்தல் - 1. நீர் கழுவிப் பிரித்தல். பொற்புயத்துப் பொதி தூக் குறி மீயரித்து விளர்க்க. (பா: 1036)
2. புண் செய்தல். (கலா) ஈர்த்தல். (வை.மு) அரிக்கின்ற துன் பம். (யுத்: 9672)

அரித்தளிர் - மெல்லிய தளிர். தாதுகு மீயரித்தளிர் மெல்லணை. (பா: 644)

அரிதல் - 1. அறுத்தல். மள்ளர் அரிகுநர் இன்மையால். (அ: 213) ஐங்கணை அரியத்தக்க புண்ணெலாம் எனக்கே ஆக்கி. (யுத்: 1593) மூக்கரிந்து நுங்குலத்தை முதலரிந்தீர். (ஆ: 349)
2. கொல்லுதல். நின்றவர் அரி என்றூர். (சு: 969)

அரிதலைப்பாளை - அரிந்த நுனியையுடைய பாளை. அரிதலைப் பாளைத் தேனும். (பா: 40)

அரிது - 1. இல்லை. அருந்தவ முயல்வார்க்கு இறையும் ஈதலாதினிய தோர் இடம் அரிது. (அ: 719)
2. ஏலாதது. இலங்கை மதில் இங்கிதனை ஏறலரிதென்றே விலங்கி அகல்கின்றனன். (சு: 158)
3. செயற்கரியது. யாதுமக்கரியது. (பா: 700)

**அரிதுன்னு பீடம்** –சிங்காதனம். எம்பிரான் அரிதுன்னு பீடமேற் பொலிந்து தோன்றினன். (பா : 195)

**அரிந்தமன்** - பகைவர்களை அடக்குபவனுன இராமபிரான். அரிந்தமன் சிலை நாணெறிந்தார்த்தலும். (கி : 171) அரிந்தம நின்னை அண்மி. (கி : 428)

**அரிபீடம்** - அரியணை. சிம்மாசனம். (பா : 195)

**அரிமகம்** - அசுவமேதயாகம். (பா : 260)

**அரிமணி** - செம்மணி. அரிமணிப் பணத்தரவரசன். (பா : 357)

**அரிமலர்ப்பங்கயம்** - செந்தாமரை மலர். (கி : 9)

**அரியணை** - சிம்மாசனம். தூய மெல்லரியணை. (பா : 319)

**அரியநூல்** - ஞானநூல். அரிய நூலுங்கற்றவர். (அ : 7)

**அரியினம்** - வண்டுகள். வண்டின் சாதிகள். அரியினங் குஞ்சி யார்ப்ப. (பா : 48)

**அரிவைமார்கள்** - பெண்கள். (அ : 607)

**அரிவையர்** – பெண்கள். (சு : 1225)

**அருக்கர்** - சூரியர்கள். மிடலருக்கர் தேர்மீது செல்வதும். (கி: 123)

**அருக்கன்** - சூரியன். (அ : 855)

**அருக்கன் சேய்** - சுக்கிரீவன். ஆயதோர் அவதியின்கண் அருக்கன் சேய் அரசை நோக்கி. (கி : 101)

**அருக்கியம்** - வழிபாடு தோன்ற அதிதிகளுக்கு வழங்கும் பூசைக்குரிய நீர். அருக்கிய மூதலினேடு ஆசனங் கொடுத்து. (பா : 251) (கி : 667)

**அருகர்** - அருகில். அருகு என்பதன் போலி ஆண்டகை கோசலை அருகர் எய்தினன். (அ : 881)

**அருகாதல்** - ஒத்தல். எண்ணில்கோடி இராமர்கள் என்னினும் அண்ணல் நின்னருளுக் கருகாவரோ. (யுத் : 4152)

**அருகுதல்** - சுருங்குதல். மெலிதல். இடமின்றிப்போதல். அருகும் செறி அஞ்சனபுஞ்சம். (அ : 1073)
2. கெடுதல். அருகா அமரர் வாழும் ஏழுலகு. (சு : 157)
3. அழிதல். கவசம் பற்றற்று அருகின. (யுத் : 2239)

**அருங்கடையின்** - முடிவில்லாத. அருமை இன்மைப் பொருள் குறித்தது. அருங்கடையின் மறை. (பா : 740)

**அருங்கலம்** - இரத்தினம். அருங்கல மன்னர் தந்த பலாண்டிசை. (பா : 1332)

**அருங்கலன்** - அணிகலம். அருங்கலன் அணங்கரசி. (பா: 1239)

**அலங்கலாம்** - தணித்தற்கரிய கோபம். (அண்) தீங்கிய கோபம் (வெ. ப) (வை.மு) அருங்கலாம் உற்றிருந்தான் என்னினும். (ஆ : 635)

**அருங்களி மால்களிறு** - தணித்தற்கரிய களிப்பினையுடை மத மயக்கம் பொருந்திய ஆண்யானை. அருங்களிமால் களிறனைய வீரர். (பா : 1112)

**அருச்சனை** - உபசரித்தல். அருக்கியம் முதலவாய அருச்சனைக் கமைந்த யாவும். (கி : 667)

**அருட்டை** - காசிபன் மனைவியருள் ஒருத்தி. (ஆ : 204)

**அருணம்** - சிவப்பு. அருணச் செம்மணி. (யுத : 654)

**அருணன்** – சூரியன் தேரோட்டி. அருணன் கண்களும் கண்டிலா இலங்கை. (யுத் : 519)

**அருணன் செம்மல்** – அருணன் மகன் சடாயு. செம்மல் – தலைமை யுடையோன்; இங்கு மகன் என்னும் பொருளில் வந்தது. அல் பங்கமுறவரும் அருணன் செம்மலே. (ஆ : 184)

**அருணன் தம்பி** - கருடன். சிறையினுற்ற சரங்களும் நிற்கவே கொல் வந்தது அவ் அருணன் தம்பி. (யுத் : 2250)

**அருணோக்கம்** . அருள் நோக்கம். அருட்பார்வை. பொது முகத் தின் அருணோக்கம் இறங்காத தாமரைக் கண் எம்பெருமான். (ஆ : 50)

**அருத்தி** - ஆசை. அருத்தி புரிகின்றது. (பா : 93) அருத்தி பிழையாய். (யுத் : 2206)

**அருத்தி பிழையாய்** - ஆசைப்படும் பொருளைத் தவருது அளிப் பாய். (யுத் : 2206)

**அருந்ததி** – வசிட்டர் மனைவி. கற்புநிலைமையில் மிகச் சிறந்தவள். பாதிவிரத்தியத்திற்கு இவளையே எல்லா மகளிர்க்கும் உவமை யாகக் கூறுவர். அருந்ததி தணவன் வேந்தற் கருங்கடன் முறை யின் ஆற்றி. (பா : 656)

**அருந்ததிகாணுதல்** - விண்ணில் வசிட்ட நட்சத்திரத்தை அடுத்துத் தோன்றும் அருந்ததி நட்சத்திரத்தைக் காணுதல். மணவினை முடிந்ததும் கொழுநன் அருந்ததியை மனைவிக்குக் காட்டுதல் கற்புநிலைக்கு ஓர் எடுத்துக் காட்டாகவே என்பர். அம்மி மிதித்து எதிர்நின்ற கலங்கலில் கற்பின் அருந்ததி கண் டார். (பா : 1330)

**அருந்ததி மலை** - ஒருமலை. தொழுதோர்க் கெல்லாம் வரன திகந்தருந்தகையது அருந்ததிமா நெடுமலையை வணங்கி. (கி : 767)

**அருந்தல்** - உண்ணுதல். வனத்த அல்ல அருந்தலில் வாழ்க்கை யான். (யுத் : 4127) அருந்தும் மெல்லடகு ஆரிட அருந்தும் என்ற ழுங்கும். (சு : 344) அருந்தும் நீர் என்று அமரரை ஊட்டினன். (அ : 644)

**அருநெறி** - செல்லுதற்கரிய வழி. கடுவன் மாதவர்க் கருநெறி காட்டுவ காணாய். (அ : 766)

**அருப்பம்** - அல்பம் என்பதன் திரிபு. 1. சிறியது. அற்பம். அருப்ப மன்றிதென் றையுற வெய்தினன். (அ : 830) (யுத் : 105ɪ)

2. அரண். பாதுகாப்பு. தடை. அருப்பமில் கேடுவந்தடையும். (ஆ : 389)

3. ஊர். எய்து அருப்பம் அத்தனையும் எய்தினர். (கி : 980)

4. அருமை. (உ.வி) ஆ : 829)

**அருப்பமில் கேடு** - 1. பெரிய கேடு. (அண்) எளிமையற்ற அதாவது பெரிய கேடு, (கலா)

2. தடையில்லாத கேடு. (வை.மு) (ஆ : 829)

**அருப்பற** - மிகுதியாக. அரும்பு அற. (அரும்புதல் - கிளைத்தல் ; தோன்றல்) மீண்டும் தோன்றுதலற. அருப்பறப் பிறந்த கோபம் மாறினன். (யுத் : 608)

**அருப்பு** - 1. அரும்பு என்பதன் விகாரம். அருப்பேந்திய கலசத் துணை. (அ, 623)

2. அருப்பம். அல்பம். அருப்பறப் பிறந்த கோபம். (யுத் : 608)

**அரும்** - இல்லாத. அருமையான. ஏத்தரும் பெருங்குணத்திராமன். (அ : 1196)

**அரும்புதல்** - தோன்றுதல். தோற்றுவித்தல். அன்பரும்பித் தருமம் மலர்ந்து. (பா : 167)

**அரும்பெருமூப்பு** - தாங்குதற்கரிய பெரியமூப்பு, அரும்பெரும் மூப்பு மெய்யதாயது. (அ : 62)

**அரும்பெரும்உறுதி** - பெறுதற்கரிய உறுதிப்பொருள். உன்னியது அரும் பெறலுறுதியொன்றுளது. (அ : 13)

**அரும்பெறற்றிலகம்** - பெறுதற்கரிய திலகம். (அ : 183)

**அரும்போதம்** - பெறுதற்கரிய வீடுதரும் ஞானம். மாதவர்க்கு வழிபாடிழைத்து அரும் போதம் முற்றி. (அ : 319)

**அருமந்து** - அருமருந்து. அருமந்து அற்றம் அகற்றும் வில்லியார். (கி : 405) [பா : பே]

**அருமறைக்கிழவன்** - அரியவேதங்களுக்குரியவனான பிரமன். முந்தினன் அருமறைக் கிழவன். (பா : 369)

அருமை - 1. இன்மை. அருங்கடையின் மறை. (பா : 740) ஏத்தரும் பெருங்குணத்திராமன். (அ : 1196)
2. கொடுமை, கான்புறஞ் சேறலின் அருமைகாண்டலின், (அ: 561)

அருமையே அருமையே - மிக அருமையாது. (வை.மு) உவகையின் வந்த அடுக்கு. அருமையே அருமையே யார் இது ஆற்றுவார். (சு : 404)

அருவி - 1. மலையருவி. அருநீர் கொண்டு வீச. (அ : 750)
2. கண்ணீர்த்தாரை. அழுதிழி அருவிக் கண்ணள். (ஆ : 622)

அருள் - 1. இரக்கம். நன்றுணர் கேள்வியாளன் அருள்வர நாணுட் கொண்டான். (கி : 622)
2. பேரன்பு. அருளின் மேவினன். (பா : 304)
3. கருணை. அருள் நோக்கம். (ஆ : 50) அருளின் வேலி. (யுத் : 360) அருள் சுரந்த. (யுத் : 292) அருள்புரிந்து. (அ : 664)
4. அருளிப்பாடு, ஆஞ்ஞை, நியமனம். ஆண்டகை அனுமனும் அருளதாம் என. (சு : 597) அருள்தந்தருளு. (சு : 616) அஞ்சுமன்றே அருளலது இயற்ற. (ஆ : 661) அருள் என் கொல். (யுத் : 218)

அருள் சுமத்தல் - கருணையைப் பெரிதும் பெறுதல். அருள் சுமந்துயர்ந்தேன். (யுத் : 4117)

அருள்தருவாரி - கருணை கடல். அருள்தருவாரியன்ன செவ்வழி உள்ளத் தண்ணல். (அ : 1030)

அருள் முற்றுதல் - கருணை நிரம்பி இருத்தல். ஈறில் பல்லாண்டெலாம் முறையினிற் புரந்தே அருள்முற்றினன். (பா : 654)

அருள்முறை - நியமித்தபடி. கமலத்தண்ணல் அருள்முறை. (பா : 208)

அருள் மெய்யின் நிற்றல் - அருளாகிய மெய்ம்மை நெறியில் உறுதியாக நிற்றல். அறங்கடவாது அருள் மெய்யின் நின்ற பின் வேள்வியும் வேண்டுமோ. (அ : 114)

அருளல் - நினைத்தல். ஆதலால் அஞ்சினேன் என்று அருளலை. (யுத் : 3079)

அருளாளர் - அருள்மிக்க பெரியோர்கள். செய்ய சிந்தைப் பேருளாளர் தத்தஞ் செய்கையிற் பிழைப்பதுண்டே. (யுத் : 434) உய்விடமளிக்கும் அருளாளர் முறை உய்த்தார். (யுத் : 700)

அருளிற்பூத்தல் - கருணையைப் பெற்றதனாற் பொலிவடைதல். நின் அருளிற்பூத்த என் ஆன்ற தொல்குலம் இனி அரசில் வைகுமால். (பா : 258)

அருளின் ஆழியான் - கருணைக்கடலாகிய திருமால். ஆனனம் மலர்ந்தனன் அருளின் ஆழியான். (பா : 200)

அருளின் வேலை - கருணைக்கடல். அரண்பிறிதில்லென அருளின் வேலையைச் சரண்புகுந்தனன். (யுத் : 360)

அருளினம்விடுகிலான் - கருணை இன்னமும் நீங்காதவன். (இராமபிரான்) இனம் – இன்னம். (யுத் : 950)

அரை - 1. இடை. இடுப்பு. பொன்னரைச் சீரையின் பொலிவு. (அ : 455) அரைவீக்கிய வாள். (அ : 645)
2. பாதி. அரை கடையிட்டமைவுற்ற முக்கோடி. (யுத் : 3910)

அரைகடையிட்ட முக்கோடி - மூன்றரைக் கோடி. (ஆ : 842)

அரைசன் - அரசன். அரைசன்னவனிடை வந்து. (பா : 1365)

அரைசு - அரசன் (இராமன்) அரைசும் அவ்வழி நின்று அரிதேகி. (கி : 36)

அரைத்தல் - 1. அழித்தல். அரைத்திலன் உலகமெல்லாம் அங்கையால். (யுத் : 2167)
2. கல்லிலிட்டுப் பசையாம்படி சிதைத்தல். துகைத்தல். ஆயிரம் வெள்ளம் அரைபட. (யுத் : 3389) மகனை அசையத் தரை அரைவித்தனே. (யுத் : 1133)
3. தேய்த்தல். வானரப்படை முற்றும் சாந்து செய்குவெனுமென முறை முறை அரைத்தனன் தரையோடும். (யுத் : 1554)

அரோ - 1. அசை. அரக்கரால் அலைப்புண்டாரரோ. (ஆத் : 125) (பா : 132)
2. தேற்றப்பொருள். தாரமாவது தாங்குந்தருக்கரோ. (கி : 336).

அரோதம் - தகைத்தல். (பழையவுரை (கலா) சீதஅரோதக்குருதித் திரை யொரீஇத் தூதர் ஓடினர். (யுத் : 3145)

அல் - 1. இரவு. அல்லின் மாரி யனைய நிறத்தவள். (பா : 412) அல்லாழிக் கரைகண்டான். (பா : 717)
2. இருள் - அல்லினை வகுத்ததோர் அலங்கற்காடெனும். (பா : 616)
3. நாள். அல்லாயிர மாயிரம் அஃகினவால். (யுத் : 1745)

அல்குதல் - 1 சுருங்குதல். மெலிதல். அல்கினுனெனச் செங்கதிர்ச் செல்வன் தோன்றினுன். (ஆ : 1138)
2. துன்புறுதல். மனமழிதல். அல்கிய திருவைத் தேற்றி. (யுத் : 4202)

அல்குல் - அரையிடம். இடைப்பக்கம். வாமமேகலை இற வளர்ந்தது அல்குலே. (பா : 84) (கி : 200)

அல்ல - அல்லாதன. அல்லாத. பொன்றிணி மண்டபம் அல்ல பூத்தொடர் மன்றுகள். (பா : 131) சாரல் அல்லவேல் மழை உலாவு முன்றில். (கி : 230) இற்றவல்லவும். (யுத் : 1538)

அல்ல அல்ல - மேரு மேரு வென அல்ல அல்ல வென. (யுத் : 2037)

அல்லதூஉம் - அல்லாமலும். மேலும். அல்லதூஉம் வல்லவன் நிலைமையும் மனமுந் தேறலாம். (சு : 1060)

அல்லல் - துன்பம். அனைவரும் எய்தினர் அல்லல் சொல்லுவான். (ஆ : 127) அல்லலின் அழுங்கிய அன்பின் மாநகர். (அ : 955)

அல்லவர் - அல்லாத பிறர். அல்லவர் இதனிலையுணரார். (யுத் : 174) மெய்ம்மையுற்றார் சிலர் அல்லவரே பலர். (கி: 272)

அல்லன - அல்லாதன. முன்றில்கள் அல்லன முத்தின் பந்தரே. (பா : 131)

அல்லாண்டான் - இரவுக்கரசனாகிய சந்திரன். நிலையழிந்த அரசர் போன்றான் அல்லாண்டான். (ஆ : 677)

அல்லி - தாமரை. அல்லி மலர் புல்லும் மங்கை இவள். (பா : 1233)
2. அகவிதழ். அல்லிபுல்லு மலர். (ஆ : 20)
3. புறவிதழ். அல்லியங் கமலமேயனைய செங்கண். (சு : 1116)

அல்லிர் - அல்லீர். தாங்குந்தன்மையர் அல்லிர். (யுத் : 2413)

அல்லின் நாப்பண் - நள்ளிரவு. ஐயனும் போயினான் அல்லின் நாப்பணே. (அ : 578)

அல்லின் மாரி - இருண்டமேகம். (கலா) இராக்காலத்து மேகம். (அண்) (பா : 412)

அல்லு - இரவு. அல்லும் நன்பகலும் நின்றமரர் ஆட்செய்வார். (சு : 401) அந்தி வானுடுத்து அல்லு வீற்றிருந்ததாமென்ன. (சு : 1085)

அல்லையாண்டமைந்த மேனி - இருளை வென்றுயர்ந்த கரிய திருமேனி. அல்லையாண்டமைந்த மேனி அழகன். (அ : 1034)

அல - அல்லாதன. பொழிலும் அல நல்லறப்பள்ளிமன்னோ. (பா - 146)

அலக்கண் - 1. துன்பம். துயரம். ஆவிபதைக்க அலக்கண் எய்து கின்றான். (அ : 199)
2. மிக்க இடர்ப்பாடு. அந்தரின் அலமந்தஞ்சித் துயருழந்து அலக்கண் உற்றான். (யுத் : 600)
3, வருத்தம். மற்றவர் அலக்கணை உரைத்திட அறிந்தான். (சு : 806)

அலக்கு - வரிச்சல். கழைகளான நெல்லினால் அலக்கும் காலும் நிரப்பினான். (யுத் : 707)

**அலகம்பு** - கூர்மையான அம்பு. (அ : 620)

**அலகறும்** - அளவற்ற. (ஆ : 190)

**அலகிலா** - 1. அளவில்லாத. (அண்)
2. முடிவில்லாத. (வை. மு) அலகிலாவிளையாட்டு. (பா : 1)

**அலகு** - 1. அளக்குமிடம். ஒரடிக் கலகிலாது. (பா : 255)
2. அளவு. அலகில் மாமுனி. (பா : 483) அலகோ இல்லா அந்தணரோ. (பா : 592) அலகறும் இலக்கணம் அமைந்த மைந்தர். (ஆ : 190) அலகிலா விளையாட்டு. (பா : 1) (பா : 3) அலகிடல் அரிய தன் அவிர் கர நிரையால். (ஆ : 199 அலகில்லன. (பா : 3)
3. எல்லே. அலகில் கற்புடைச் சானகி. (யுத் : 1297)
4. கூர்மை. அஞ்சம்பையும் ஐயன் தனது அலகம்பையும் அளவா. (அ : 620)
5. இலேவடிவு.

**அலகை** - பேய். அலகையும் ஐயன் கீர்த்தியைப்பாடின. (பா : 473) அலகை... நாடகம் நடிப்பன காண்டி. (அ : 1098)

**அலங்கல்** - 1, மாலே. அலங்கல் மன்னன். (அ : 49) தோட்டு அலங்கலினீர். (ஆ : 220)
2. வெற்றிமாலே. அலங்கல் அயில் வஞ்சகன். (சு : 159) அலங்கலார்க்கிது அடுப்பதன்றுமரோ. (கி : 344)

**அலங்கற்காடு** - பூமாலேகள் உள்ளதோர் காடு. அல்லிணே வகுத்ததோர் அலங்கற் காடெனும். (பா : 616)

**அலங்கன்மா** - கூத்தாடுகின்ற குதிரை. யானேயை அலங்கன் மாவை. (யுத் : 2421)

**அலங்காரம்** - அலம் – அணி; காரம்–செய்தல். அழகு செய்வது. அலங்காரமென உலகுக்கு. (ஆ : 198)

**அலங்குதல்** - 1. விளங்குதல். ஒளிவீசுதல். அருவியில் தாழ்ந்து முத்தலங்கு தாமத்த. (பா : 127) அலங்கு தோள்வலி. (கி : 295) அலங்கொளி. (யுத் : 3739)
2. அசைதல். செல்லுதல். அலங்கு நீர் ஆறு. (ஆ: 227) மஞ்சலங்கொளியோன். (சு : 678)
3. அலேவீசுதல். அலங்கு வேலே. (யுத் : 331)
4. எரிதல். அலங்குதீ. (கி : 831)

**அலங்குறல்** - மிகுதியாக நடுங்கல். (வை.மு) அசைதல். நடுங்கல். (கலா) அங்கை இரண்டும் அலங்குறச் சூடி நின்றனன். (யுத் : 3936)

**அலங்கொளல்** - தேகசிரமத்தையடைதல்: விண்டலங் தொடுமால் வரை வேரொடுங் கொண்டு அலங்கொள வீரர் குவித்தலால். (யுத் : 645)

**அலங்கொளி** - சூரிய சந்திரர். அலங்கொளி திரிதர உலகனைத் தையும். (யுத் : 3737)

**அலசுதல்** - 1. சோர்தல். வாடுதல். அகவும் இளமயில்கள் உயிர் அலசியன அனையார், (அ : 540)

2. வருந்துதல். வருத்தமடைதல். திருவுடம்பு அலச நோற்கின் ருன். (ஆ : 242)

3. அலுத்தல். ஐய சாலவும் அலசினன். (அ : 62) அமர்பொருது அலசிஞயோ. (யுத் : 3195)

**அலத்தகம்** – பஞ்சு. செம்பஞ்சுக் குழம்பு. அலத்தகப் பஞ்சடுத்த பரிபுரப் பல்லவம். (அ : 1076) அலத்தக விரைக்குமுதவாய். (சு : 971)

**அலந்தலை** - சஞ்சலம். கலக்கம். மாருட்ட மெனினுமாம். அலந்தலையுற்ற அரும்புன்கள் ஐந்தும். (அ : 198) அலந்தலை யுற்றது. (சு : 909)

2. துன்பம். மானுடர் அலந்தலைபட. (யுத் 73)

3. கலங்கிய நிலை. இங்குளன் இங்குளனென்று அங்கே உணர் கின்ற அலந்தலைவாய். (யுத் : 3468)

**அலந்து** - வருந்தி. (உ. வி) அலந்து அலையுற்ற அரும்புலன்கள் ஐந்தும். (அ : 198)

**அலப்பு** - அலம்பு. ஒலிக்கும். அலப்பு நீருடுத்த பாரகம். (பா : 262)

**அலம்** - 1. துன்பம். வருத்தம். அவர் தோற்று அலம்வந்துகத் துறந்து. (யுத் : 1681) (அ : 198)

2. சுழற்சி. ஆசலம்புரி ஐம்பொறிவாளி. (பா : 1308)

3. சஞ்சலம். (உ.வி) (பா : 12)

4. மிகுதி. (வை.மு) அலம்வரு நிழல். (பா : 1308)

**அலம்பு** - வருத்தம். அலம்புறு பறவையும் அழுவவாமென. (ஆ : 1139)

**அலம்புதல்** – 1. ஒலித்தல். முழங்குதல். அஞ்சலம் அலம்புதளக் கங்கணங்கள். (ஆ : 16) கோடலம்பின. (யுத் : 979)

2. அசைதல். காற்றலம்பினும். (கி : 165) (உ. வி) (கி : 32)

3. பரவியடித்தல். பாடலம்பு உயர் வேலை. (சு : 721)

4. பிளிறுதல். பாடலம்பின பாய்மத மர்வெலாம். (யுத் : 979) [பா : பே]

**அலம்புபாரக்குழலி** - ஒலிக்கின்ற (மலர்ச்) சுமையைத் தாங்கிய கூந்தலையுடையவள். (பா : 1168)

**அலம்வரல்** - 1. சுழலுதல். மாறுபடல். அலம்வரு நிழல். (பா : 1308) அலம்வரும். (யுத் : 3730)

2. நெகிழ்ந்து உருகுதல். அலம்வரும் செங்கண்வாலி. (கி : 382) [பா : பே]

3. மனம் வருந்துதல். ஒடுங்குதல். சிந்தை அலம்வந்து தளர்ந்து சாய்ந்தான். (யுத் : 865) (யுத் : 1681)

4. மனம் சுழலுதல். மிக்க துன்பமடைதல். வெருவலொடலம் வரலால். (யுத் : 3093) அலம்வரலுற்றன அலறி. (யுத் : 4001)

அலம்வருதல் செய்தல் - சுழற்சியை உண்டாக்கல். துன்பஞ் செய்தல். இடைக்கும் அலம்வருதல் செய்யும் முலையினுள். (யுத் : 907)

அலமரல் (அலமருதல்) - 1. மனம் சுழலுதல். அது இது எனஓரார் அலமரலுறுவாரும். (பா : 1278) அலமந்து அஞ்சி. (யுத் : 600) அலமருந்துயர். (யுத்: 677) கூற்று அலமர. (யுத்: 1681) (யுத் : 3765) (யுத் : 4146)

2. சுழலுதல். கூர்ங்கள்ளுண்டு அலமந்த கண்ணூர். (சு : 223)

3. நிலைகலங்குதல். திண்மை அலமரச் செய்யலாமோ. (கி: 314)

4. மனங்கலங்குதல். தன் கணவன் வஞ்சன் வினையிற் போத லோடும் அலமந்தனள். (ஆ : 39)

அலமாத்தல் - மனங்கலங்கிச் சுழலல். (வை.மு) (ஆ : 39)

அலர் - தாமரைப்பூ. தாமரை. அலரின் மேல் அயன். (யுத் : 407)

2. முகை விரிதல். அலர் மலர். (சு : 420) (அ : 696)

3. பழிச்சொல். புறன் அலர் அவனுறப் போதுபோக்கி யான். (சு : 502)

அலர்கதிர் - சூரியன். அம்பொன்மால்வரை அலர்கதிர் உச்சி சென்றடைய. (அ : 762)

அலர்குதல் - விளங்குதல். இந்திரன் நெடுவானம் மீன் அலர்குவ தென்ன. (பா : 1270)

அலர்தல் - 1. சொரிதல். கமழ்தல். கொங்கலரும் நறுந்தண்டார்க் குகன் என்பான். (அ : 1270)

2. பரவுதல். வில்லலர்ந்து விண் குலாய். (கி : 233)

3. தோன்றுதல். சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை. (சு : 349)

4. மலர்தல். பூவலர் குரவோடும். (ஆ : 696)

அலரி - 1. சூரியன். தாமரைப்பூ நனி முகிழ்த்தன அலரி போனபின். (அ: 776)

2. அக்கினிதேவன். சூடுறுமேனிய அலரி தோகையை மாடுறக் கொணர்ந்தனன். (யுத் : 4016)

அலரி காதலன் - சுக்கிரீவன், (யுத் : 4337)

அலரியோன் - சூரியன். அலரியோன் தானும் நாணும் வடிவு. (பா: 673)

அலருளோன் - பிரமன்.

**அலவன்** - 1. நண்டு.
2. கர்க்கடகம். அளைபுகும் அரவினொடு அலவன் வாழ்வுற. (பா : 286)

**அலவுதல்** - சிதறுதல். அலவு நுண்டுளி அருவிநீர். (அ : 761)

**அலறுதல்** - உரத்தழுதல். புவிமீது அலறிப் புரள. (அ : 370) அலறுங் குரலால். (அ : 377)

**அலி** - ஆணும் பெண்ணுமல்லாதது. பெண்ணினுருவாய் ஆணுகி மற்றுமலியாகி. (யுத் : 2206)

**அலை** - 1. கடல் அலை. அலைமானுறுமாசையின் வந்தனவால். (ஆ : 774)
2. கடல். (ஆகு) அலைபுடைத்த வாளரக்கர். (யுத் : 1429)

**அலைத்தல்** - 1. வருத்துதல். அஞ்சொன் மாதரை ஊறுகொண்டலைக்க. (அ : 898) நெடிதலைக்கும். (ஆ : 366)
2. அலைவீசுதல். வாரிக்கொண்டலைக்கும் நீரால். (பா : 25)
3. அடித்தல். வயிறலைத்து. (ஆ : 814)
4. கடித்தல். எயிறலைத்து. (ஆ : 814)
5. உதிரச் செய்தல். எயிறலைத்த கரதலம். (யுத் : 1284)

**அலைதல்** 1. நிலை பெயர்தல்.
2. அஞ்சுதல். துன்புறல். உற்கு அலையர். (ஆ : 613)

**அலைப்புண்டல்** - வருந்துதல். அரக்கரால் அலைப்புண்டாரரோ. (ஆ : 125)

**அலையுறுதல்** - பொறிகள் புலன்களைக் கொள்ளாமற் கலங்குதல். அலந்து அலையுற்ற அரும்புலன்கள் ஐந்தும். (உ.வி) (அ : 198)

**அலையெறிநீர்** - கடல். (கலா) கம்பித் தலையெறி நீருறுகலம். (பா : 1356)

**அலைவு** - அசைதல். அலைவில் வெள்ளெயிற்றுல் இதழ் மறைத்துளது. (யுத் : 2317)

**அலோதி** - அல் ஓதி. இருள் போலும் கரிய கூந்தல். அன்று வாளரக்கன் சிறைவைத்த துன்றலோதி. (சு : 331)

**அவ்வயின்** - 1. அக்காலத்து. அவ்வயின்.... சுராசுரர் தங்களிற் பிணங்க. (பா : 520)
2. அவ்விடத்து. அவ்வயின் அழகனும் வைகினன். (ஆ : 35) (ஆ : 261)

**அவ்வவர்** - அவரவர். அவ்வவர் துறைதொறும் அறம் திறம் பலர். (அ : 143)

**அவ்வவை** - அந்த அந்த. அவ்வவை காலுற, (சு : 667)

அவ்வழி – 1. அப்பொழுது. அவ்வழி இமையவர். அறிந்து கூடினார். (அ : 1195) (யுத் : 3780)
2. அவ்விடம். அருந்ததியனைய நங்கை அவ்வழி இருந்தாள் என்று. (யுத் : 791) அவ்வழி அவனை நோக்கி. (அ : 1030)

அவ்வழியுலகு – அப்பொன்னுலகம். அவ்வழி உலகினும் உளர் கொலோ ஐயா. (அ : 843)

அவ்விடை – அவ்விடத்து. அவ்விடை அண்ணல்தானும் அன் றரும் பொடியின் வைகி. (அ : 1036) (யுத் : 1889)

அவ்வியம் – 1. பொறுமை. அவ்வியம் நீத்துயர்ந்த அருந்தவன். (பா : 242)
2. தீக்குணங்கள். அவ்வியம் நீத்த சிந்தை முனிவன். (பா: 686)

அவ்வுலகம் – மறுமை. அவ்வுலகத்தினும் நரகிலாழ்ந்து. (அ: 1141)

அவ்வை – தாய். கடிகமழ் கமலத்து அவ்வை. (அ : 185)

அவசத்தொழில் – தன்வசமிழந்த நிலை. அவசத்தன்மை. (வை மு) கவசத்தையும் நெடுமார்பையுங் கடந்து அக்கணை கழிய அவசத் தொழிலடைந்தான். (யுத் : 3015)

அவசம் – தன்வசம் தப்பிய நிலை. மூர்ச்சையடைதல். காப்புறு கடனின்றாக அவசத்தை யடைந்த வீரன். (யுத்: 2123) அவசனாகி. (யுத்: 1658) அவசமெய்திட. (யுத்: 2318)

அவஞ் செய – வீணாகச் செய்ய. பாழ்படும்படி செய்ய. அவஞ் செயத்திருவுடம்பு அலச நோற்கின்றான். (ஆ : 242)

அவண் – அவ்விடம். (வை மு) அடைந்தவண் நோக்கி. (அ: 188) அவண் எழுந்த சேனை. (அ: 976)

அவண – 1. அவ்விடத்திலுள்ளன. அரசெலாம் அவண. (பா: 99)
2. அவ்விடத்திலுள்ள. அவண அண்ணலதேவல். (யுத்: 1564)
3. அப்புறத்ததாகிய. அவண விண். (ஆ: 38)

அவணங்கு – அவ்வணங்கு. அன்ன பொழுதின்கண் அவணங்கு மறிவுற்றாள். (கி: 869)

அவணை – அவ்வணை. வந்து அவணையைக் குறுகி நின்றான். (யுத் : 792)

அவத்தம் – உண்மையானதன்று. [அபத்தம்] போர்ப் புறங் கொடுத்தோர்ப்போன்ற ஆண்டொழிலோரிற் பெற்றவெற்றியும் அவத்தம் என்றான். (யுத் : 3876)

அவத்தன் – பயனற்றவன்; வீணன். ஆவ நான் பிறந் தவத்த னவா. (அ : 925)

அவதி – 1. துன்பம். இந்த மேதினிக் கவதியுண்டோ. (பா : 207)
2. தவணை. ஒரு திங்கள் அவதியாகத் தேண்டி இவண் வந்தடைதிர். (கி : 775)

3. காலஎல்லை. அப்புறம் போயுந் தேட அவதியின் அமைந்து போன. (சு : 518)
4. எல்லை. மிகையாவி அக்காலத்தே அகலுமோ அவதி என்றுன் றுண்டானல். (அ : 615)
5. முடிவெல்லை. பதியிடை அவதி எய்தப் பெற்றுழி இனிது உண்டாடப் பெறற்கருந் தகைமைத்து. (ஆ : 791)
6. காலம். அமயம். ஆயதோர் அவதியின்கண். (கி : 101) ஆயது பயப்பதோர் அவதியாயது. (யுத் : 329) [பா : பே]
7. அளவு. என்பால் வைத்த அன்பினுக் கவதியுண்டோ. (யுத் : 1260)

**அவந்தன்** – தலை குனிந்து வணங்குபவன். நின் மகன் அவந்தனுய் வெறுநிலத் திருக்கலாது. (அ : 152)

**அவந்தரல்** – அழிவடைதல். திக்கு அவந்தர நெடுந்திரள்கரம் சினவுதோள் அக் கவந்தன். (கி : 70)

**அவந்திகர்** – அவந்திநாட்டரசபரிவாரங்கள். அங்கராசர் குலிங்தர் அவந்திகர். (பா : 1194)

**அவம்** – 1. கேடு ; அழிவு. மக்கட்பெற் றுயிர்வாழ்வார்க்கு அவமுண்டே. (அ : 595)
2. பயனின்மை ; வீண். அவமிலா விருந்தாகி. (ஆ : 148) உன்னை வென்று அவம். (யுத் : 1907)

**அவம் பிழைத்தது** – வீணே பழுதாயிற்று. (வை. மு) இத்தனை காலமும் உழந்த ஈதெலாம் பித்தெனலாய் அவம் பிழைத்ததால். (யுத் : 3994)

**அவயம்** – அபயம். அவயம் நின் சரணலாற் பிறிதொன்று கண்டதுண்டோ. (யுத் : 601) அவயமும் அளிக்கும். (யுத் : 1357)

**அவயம் நின்னபயம்** – அபயம், உனக்கு நான் அபயம். அவயம் நின்னபயமென்னு அடுத்தடுத்தரற்றுகின்றுன். (யுத் : 601)

**அவர்** – அவர்கள். அவர்தம் சிந்தையே. (பா : 295) (யுத் : 720)

**அவல்** – பள்ளம். (பா : 147) [பா : பே]

**அவலங் கூர்தல்** – மிக்க துயர் கொள்ளல். அருமையேதுனக்கு நின்று அவலங்கூர்தியோ. (கி : 210)

**அவலம்** – 1. துன்பம். தோன்றிய பேரவலம் துடைத்த துண்டேல். (அ : 132) அவலந்தான் தழீஇ. (கி ; 676)
2. அழுகை. அம்மாதவனும் விரைவோடு அவலந்தரு நெஞ்சினனுய். (அ : 384)
3. சோகம். அற்றிற மறத்தியோ அவலமுண்டெனு. (அ : 558)
4. வருத்தம். மனக்கலக்கம். அவலமெய்த அடைத்துழி. (யுத் : 749)

அவலித்தல்–துன்பமுறுதல். ஐய நீ யாதொன்றும் அவலிப்பாயலே. (அ : 1143) அழுது அவலித்திலர். (அ : 528)

அவள் – சுட்டு. சீதாபிராட்டி. அண்ணலும் நோக்கினன் அவளும் நோக்கினள். (பா : 598) அழகனும் அவளும். (அ : 1034)

அவன் – சுட்டு. சுமாலி. அவனொடும் பாதலத் தநேக நாட்செலீஇ. (பா : 382) இராமன். (அ : 1034) பரதன். ஆர் அவற்கன்பிலாதார். (அ : 1029)

அவனி – பூமி. அவனி காவல் பரதனதாகுக. (அ : 323) அவனி காவலர். (அ : 464) அவனிமாது. (அ : 29) அவனி சேர்தல். (அ : 473)

அவா – பொருளைப் பெறவேண்டும் என்னும் ஆசை. அடையாத பொருளை அடைய வேண்டும் என்னும் இச்சை. பற்றவா வேரொடும் பசையற. (பா : 344)

அவாவுதல் – விரும்பி வெளிப்படுத்தல். தேனவாம் மலர்த்திசை முகன். (கி : 487)

அவி – 1. வெப்பத்தைத் தணிக்கின்ற தேவர் உணவு. (அண்) அவியகத்துறைகள் தாங்கி. ஆ : 225)
2. அந்தணர் வேள்வித் தீயில் தேவர்களுக்கு அளிப்பது. தேவர் தம் அவியமுதானது அங் நகருளோர்க்கெலாம். (அ : 123) வெங்கனலுக்கு அவியாக்கினன். (யுத் : 3918)
3. உணவு. மனத்தான் மலர் புனல் சாந்தோடு அவி தூபம் வகுத்தான். (யுத் : 3043)

அவிசு – வேள்வியில் இடப்படும் அவிசு. அவிசினுடைய சொரூபம். அந்தமில் வேள்விமாட்டு அவிசுமாம் அவன். (யுத் : 195)

அவிஞ்சை – 1. அஞ்ஞானம். அவிஞ்சையெனும் பொய்யை மெய் போல் நடிக்கின்ற யோகி போன்றான். (சு : 1165)
2. மாயவித்தை. மாயச்சக்தி. வாளெயிற்றர்தாம் அவிஞ்சையர் கடற் பெருந்தகையினர். (யுத் : 3785)

அவித்தல் – 1. அடக்குதல். ஐந்தவித்தரிதிற் பெற்ற செய்தவம். (அ : 273)
2. அழித்தல். ஆறு வெள்ளத்தையும் அவித்தான். (யுத் : 2306)
3. இல்லையாகச் செய்தல். ஆழிமால் வரைக்கப்புறத் திருளையும் அவித்த. (யுத் : 554)

அவிதல் – 1. இறந்துபடுதல். அப்புறத்தரக்கரும் அவியக் காண்டியால். (சு : 667)
2. அடங்குதல். அவியுறு மனத்தனுகி. (கி : 355)

**அவிர்தல்** - 1. விளங்குதல். அலகிடலரியதன் அவிர்கர நிரையால். (ஆ : 109)
2. ஒளி வீசுதல். அவிர் பைம்பொன். (பா : 322)

**அவில்** - அகரச் சுட்டினடியாகப் பிறந்த அவ் என்ற பலவின் பாற்பெயர் அற்றுச் சாரியை விகாரத்தால் தொக ஏழனுருபு பெற்று 'அவில்' என வந்தது. சாரியை பெறின் அவற்றில் என நிற்கும். (அவாய்) அச்சேறுகளில், அவில் விழும் கொடித் திண்டேரினே. (பா : 147) [பா : பே]

**அவிழ்தல்** - பெருகுதல். மட்டவிழ் மலர்க்குழலினுள். (யுத் : 65)

**அவுணர்** - அசுரர். பகையிருளவுணர் வீந்துக. (அ : 714)

**அவை** - 1. சுட்டு. அவையெலாம் வந்தியைந்தன இமைப்பின் முன்னம். (பா : 335)
2. அவ்வை. (ஔவை) தாய். தாய் அவை. (யுத் : 1360)
3. பண்டறி சுட்டு, ஆரணர் உலகியற்கை அறித்தக்கார் அவை ஏழும் ஏழும் அஞ்சும் வீரனூர். (யுத்: 3911)

**அவைஅவை** - அந்த அந்த. முனிவன் யாது சொல்லினன் அவை அவை இதமென எண்ணி. (யுத் : 186)

**அழகன்** - இராமன். (அழகு - இராமம்) அல்லையாண் டமைந்த மேனி அழகன். (அ : 1034)

**அழகிது** - 1. அங்கீகார வார்த்தை. பொருத்தம். அழகி தென்றண்ணல் கூற. (யுத் : 2225)
2. எதிர்மறை இலக்கணை. இருந்தழுவதே அழகிது இவ்வன் பென்றூர் சிலர். (அ : 483)

**அழகிது அழகிது** - அழகாக இருக்கிறது அழகாக இருக்கிறது. மகிழ்ச்சிக் குறிப்பு. அழகிதழகிதென அழகன் உவகையொடு பழகும் அதிதியரை எதிர்கொள் பரிசுபட. (யுத் : 3419)

**அழகிற்று** - நன்று. சிறப்புடையது. அங்கீகாரச் சொல். அழகிற் றேயாகும் என்றூன். (யுத் : 922) இராவணி அழகிற் றென்றூன். (யுத் : 2555)

**அழகின் புனைகலம்** - அழகுக்கோர் அணிகலம் போல்பவளாகிய இலக்குமி. பூவின் திருவை அழகின் புனைகலத்தை. (யுத் : 293)

**அழகினுக்கழகு செய்தல்** - 1. அழகுக்கு மேலும் அழகு செய்தல். அமிழ்தினைச் சுவை செய்தென்ன அழகினுக்கு அழகு செய்தார். (பா : 1204)
2. அழகுக்கும் அழகுசெய்தல். மிக்க சிறப்பை உண்டாக்குதல். அருந்ததிக் கருகு சென்று ஆண்டு அழகினுக்கு அழகு செய்தாள் இருந்த திக்கு உணர்ந்திலாதார் ஏகினூர். (கி : 924)

**அழகு** - கண்டோர் விரும்பும் உருவநலம். அழகும் வீரமும். (அ : 159)

**அழல்** - 1. நெருப்பு. அழற்கொழுந்து. உயிர்ப்பினோடு அழற் கொழுந்துக. (அ : 858)
2. ஒளி. அரஞ்சுட அழல் நிமிர்வேல். (அ : 1106)
3. காமத்தீ. அளிக்கும் மெய்யுயிர் கான்று அழல் அஞ்சினள். (ஆ : 303)

**அழல்தரும் கடவுள்** - சிவபிரான், அக்கினியை வெளியிடும் நெற்றிக் கண்ணையுடைய கடவுள். அழல் தரும் கடவுள் அன்னாய். (பா : 557)

**அழல்தரும் கதிரோன்** - சூரியன். அழற்றரு கதிரோன் தோன்றும் உதயத்தோடு அத்தம் ஆன. (யுத் : 281)

**அழல்தல் (அழலுதல்)** - 1. சினத்தல். அரக்கன் அழலா. (ஆ : 25)
2. வருத்துதல். எரிதல். அழல்வீர் எனதாவி அறிந்திலிரோ. (சு : 493)
3. கொதித்தல். மாற்றவளைக் கண்டக்கால் அழலாதோ மனம். (ஆ : 346)

**அழல்மும்மை** - மூன்று தீ. முத்தீ பார்க்க.

**அழல்விளக்கு** - தீச்சுடரையுடைய விளக்கு. பதங்கம் ஆரழல் விளக்கினில் வீழ்ந்தென. (யுத் : 3437)

**அழற்கொடி** - புகை. அழற்கொடியோன். (யுத் : 2321)

**அழற்கொடியோன்** - அழல்போலும் கொடியவன். தூமிராட்சன். புகைபோன்ற கண்ணையுடையவன். (உ வி) (யுத் : 2321)

**அழற்கொழுந்து** - அழற்சிகை. நெருப்புக்கொழுந்து. அழற் கொழுந்துகப் பார்ப்படங்கின கண்ணெலாம். (யுத் : 1199) அழற் கொழுந்துகள் ஓடின. (அ : 858)

**அழன்மணி** - அழல்மணி. ஒளிவிடுகின்ற இரத்தினம் முதலிய மணிகள். அழன்மணி திருத்திய அயோத்தியாளுடை நிழல். (பா : 133)

**அழி** - 1. அழிதல். அழிவரும் அரசியல் எய்தி. (அ : 900)
2. அற்ற. நாசமான அன்பழி சிந்தையராய ஆடவர். (சு : 500)
3. மிக்க. அழிமதத் திழுக்கலாற்றின். (பா : 868)

**அழிகவுள்** - மத நீர் பெருகும் கன்னம். அழிகவுள் தும்பி ஈட்டம். (அ : 647) அழிகவுள் வேழம். (அ : 825)

**அழிசெம்புனல்** - அடிபட்டதனால் தோன்றிய இரத்தம். ஆறு ஆயிரமுளவாகுதல் அழிசெம்புனலவை புக்கு. (யுத் : 3363)

**அழிசெய்தல்** - கெடுத்தல். கன்னியை அழி செயக் கருதினேன். (அ : 902)

அழித்தழித்தாக்குதல் – பலமுறைகள் மாற்றி மாற்றிப் படைத்தல். பன்முறை அழித்தழித் தாக்குவாற்கு அரிதுண்டாகுமோ. (யுத் : 15)

அழித்தும் – மீட்டும். அழித்துமோர் பிறப்புறு நெறி சென்று. (யுத் : 3435)

அழித்தொழிகாலம் – அனைத்தையும் அழித்துத் தீர்க்கின்ற ஊழிக்காலம். அழித்தொழி காலத்தார்க்கும் ஆர்கலிக் கிரட்டி ஆர்த்தான். (யுத் : 2544)

அழிதரல் – வலி கெடுதல். வெள்ளங் தள்ளி அழிதர. (அ : 1047) (யுத் : 3217)

அழிதல் – 1. தோற்றல். இராவணற் கழிந்து வெள்கிய நீலுறு திசைக்கரி. (சு : 667)
2. கலங்குதல். வெவ்வழலுற்ற மெல்லென் மெழுகென அழியும் மெய்யன். (அ : 572)
3. பெருகுதல். அழிபுனல் யாறு. (யுத் : 1012)
4. பழுதுபடல். அன்னை நீ உரைத்த தொன்றும் அழிந்திலது. (யுத் : 2653)
5. சொரிதல். பொருளெலா மழிந்து உவந்து கொண்டாடலின். (பா : 1201)
6. கரைதல். ஊனழிய. (சு : 326)
7. வற்றுதல். நீரழிந்திடா நெடுமழை. (யுத் : 1461)
8. இல்லாமற் போதல். அன்பழி சிந்தைய ராய ஆடவர். (சு : 504)
9. சிதைதல். பாரவெஞ்சிலை அழிந்தது. (யுத் : 1461)

அழிப்பு – தவறுதல். அழிப்பில சான்று நீ உலகுக்கு. (யுத் : 4017)

அழிவரும் அரசியல் – குடியின் முதியோர் அழிதலால் வரும் அரசியல். (அ : 900)

அழிவு – தீங்கு; அகிருத்தியம்; அழிம்பு. அரக்கர் ஓர் அழிவு செய்து கழிவரேல். (கி : 316)

அழுக்கு – அழுக்குடம்பு. முழுப்பிணி அழுக்கு. (கி : 656)

அழுகுவார் – அழுவார். அழுகுவார்கள் நகுவார்கள். (யுத் : 2785)

அழுங்கல் – 1. இரக்கம். அழுங்கலில் சிந்தையீர். (பா : 683)
2. பின்வாங்குதல். அழுங்கலில் சிந்தையாய். (யுத் : 1330)

அழுங்குதல் – 1. வாய் விட்டுக் கதறுதல். புழுங்குவான் அழுங்கினன். (கி : 871)
2. துன்பப்படுதல்; வருந்துதல். ஆவீ சால நொந்து நொந்து அழுங்குவானுமாயினன். ஆ : 651) ஆடகத்தோளை நோக்கி நொந்து நொந்தழுங்கி நைவர். (யுத் : 2146) [பா : பே] அழுங்கி மாழ்கினர். (பா : 614)

3. கெடுதல்; அழிதல். அழுங்கு நாள் இதென்று அந்தகன் ஆணையால். (ஆ : 369)
4. அஞ்சுதல். அழுங்கா மனத்தண்ணல். (சு : 52)
5. மனம் ஒடுங்குதல். நீலமேனி அரக்கர் வீர நினைந்தழுங்கிய நீர்மையோ. (கி : 508)

அழுத்துதல் – அழுந்தும்படி செய்தல். கருங்கடலுள் அழுவத்துள் அழுத்தினன். (யுத் : 1579)

அழுது அவலித்தல் – புலம்பல் மூலமாய் வருத்தத்தை வெளிக் காட்டல். (அ : 528)

அழுது சாம்பல் – புலம்பியவண்ணம் வாடுதல். (வை. மு) புலம்பியவண்ணம் பொலிவழிந் தொடுங்கல். (கலா) சரண் எனக்கு யார் கொல் என்று சானகி அழுது சாம்ப. (யுத் : 420)

அழுந்துதல் – ஆழ்தல். அளியத்தேன் அழுந்துகின்றேன். (யுத் : 2163) அழுந்திய பாலின் வெள்ளம். (யுத் : 2870)

அழுவத்தீ – மிகுந்த தீ. (ஆ : 110)

அழுவநீர்வேலை – பரப்பான நீரையுடைய கடல். (யுத் : 903)

அழுவம் – 1. பரப்பு. அழுவநீர் வேலை. (யுத் : 903) பாற்கடல் அழுவம். (யுத் : 918)
2. ஆழம். வீங்குநீர் அழுவந் தன்னுள். (அ : 1043)
3. நடு. அரங்கொண்ட கருங்கடலுள் அழுவத்துள் அழுத்தினன். (யுத் : 1579)
4. ஆழமான இடம்; குழி. சுடர்க்கனல் சுழிபடர் அழுவத்துள் இட்ட போதும். (யுத் : 217)
5 மிகுதி. அழுவத்தீயிடை நுழைவதோர் தெளிவினை யுடையான். (ஆ : 110)
6. கடல். ஆர்கலி அழுவந் தந்த அமிழ்தென. (ஆ : 722)
7. பெருக்கு. பாற்கடல் அழுவம். (ஆ : 641)
8. யாறு. (வை. மு) (அ : 1043)

அழைத்தல் – 1. சொல்லப்படுதல். வேறழைத்த தீவிடத்தினை அருந்தலாகுமோ. (அ : 25)
2. கதறுதல். வருணன் வாயுலர்ந்தழைத்தனன். (யுத் : 594)

அள் – 1. சந்து. கட்டு. அள்ளாடிய கவசம். (யுத் : 1139)
2. கூர்மை. அள்ளுகிர். (சு : 683)
3. அழுத்தம். அள்ளுறத் தழுவினன் போன்று அகமலர்ந்தினி தின் நோக்கி. (யுத் : 4331)

அள்ளல் – 1. அள்ளுதல். அள்ளல் ஓங்கு அளத்தமுதின் பண்டியும். (பா : 85) அள்ளல் பட்டன. (சு : 957) அள்ளப் பட்டன. [பா : பே]

2. கூட்டம். அள்ளல் வெஞ்சர மாரன். (சு : 266)
3. சேறு அள்ளற்பள்ளப்புனல் சூழ் அகன் மாநிலம். (அ : 357)

**அள்ளற்பள்ளப்புனல்** – சேற்றையுடையதாய் ஆழ்ந்துள்ள கடல். (அ : 357)

**அள்ளற் பூ** – தாமரை. பங்கஜம். (பா : 704)

**அள்ளற் பூமகள்** – செந்தாமரை மலரில் வாழ்கின்ற திருமகள். அள்ளற்பூமகள் ஆகுங்கொலோ. (பா : 704)

**அள்ளாடுதல்** – பற்றுவிட்டுப் போதல். சந்துவிட்டுப் போதல். அள்ளாடிய கவசத்தவிர் மணியற்றன. (யுத் : 1139)

**அள்ளி அள்ளி** – கோன் முகந்தள்ளியள்ளிக் கொடுஞ்சிலை நாணிற் கோத்து. (யுத் : 1881)

**அள்ளுதல்** 1. கொத்துதல். பழன நன்ஞரை கண்ணிழல் கய லெனக்கருதா அள்ளி நாளும் அகன்பணை மிதிலை. (பா : 540)
2. கையில் எடுத்தல். அள்ளி அப்ப. (யுத் : 10) வெள்ளியம் பெருந்தடங்கிரி வேரொடும் வாங்கி அள்ளி. (யுத் : 514) (யுத் : 1881) அள்ளி நுங்கலாம் ஆரிருட் பிழம்பு. (யுத் : 2582)
3. இலேசாக எடுத்தல். வெள்ளியங்கிரியினை விடையின் பாக னோடு அள்ளி விண்தொட எடுத்து. (யுத் : 37)

**அள்ளிலைப்படை** – நெருங்கிய இலைவடிவான வேற்படை. அள்ளிலைப்படை அகம்பன். (யுத் : 2487)

**அள்ளெரி** – செறிந்த நெருப்பு. (கலா) அள்ளிக்கொள்கின்ற எரி. (வை.மு) இவ்வூரை அள்ளெரி மடுத்து. (யுத் : 2845)

**அளக்கர்** – கடல். அளப்பதற்கு அருமையானது எனக் காரணக் குறி. அளக்கர்க் கோடு தீந்தெழ. (யுத் : 556) அளக்கரும் அளக்கர். (பா : 295) அளக்கர் வாழ் முத்தம். (அ : 260)

**அளக்கர் இரும்பரப்பு** – கடல் சூழ்ந்த பெரிய உலகு. அளம் கொள் அளக்கர் இரும்பரப்பில் அண்டருலகில் அப்புறத்தில். (அ : 602)

**அளக்கர் வாழ் முத்தம்** – கடலில் தோன்றும் முத்தம். (அ : 260)

**அளகபந்தி** – மயிர்க்கற்றை. அளகபந்தி திருமுகம் மறைப்ப நீக்கி. (பா : 1019)

**அளகம்** – 1. கூந்தல். அளகவாணுதற் சுந்தரி. (சு : 148)
2. முன் நெற்றியில் தொங்கும் மயிர். அளக வாணுதல் திலதம். (அ : 183)

**அளகவல்லி** – கூந்தலாகிய கொடி. கூந்தலுள்ள கொடி. (அண்) நீரிலே தோன்றும் கொடிகளின் கொழுந்து. (கலா) அளகவல்லி யின் கொழுந் தெரியுற்றெனத் துயரங் கூர்கின்றார். (அ : 467)

அளவல்லியர் – கூந்தலுள்ள கொடிபோலும் மகளிர். விஞ்சை நாட் டளகவல்லியர். (சு : 1066)

அளகவோதி - 1. முடிக்கப்பட்ட கூந்தல். (வை.மு)
2. அளகமாகிய ஓதி (அளகம்-முன்நெற்றி; ஓதி-குழல்) (அண்) மஞ்சொக்கும் அளகவோதி. (ஆ : 629)

அளத்தமுது - உப்பு. அள்ளல் ஓங்களத்தமுதின் பண்டி. (பா : 85)

அளம் – 1. உப்பளம். அளங்கொள் அரக்கர் இரும்பரப்பில். (அ : 602)
2. குழைசேற்றினைமிதித்து இறுகப்பண்ணின இடம். (உ.வி) அள்ளல் ஓங்களம். (பா : 85)

அளவளாவுதல் – 1. நட்புப்பூண்டொழுகல். நெஞ்சங் கலத்தல். தையலை விட்டவன் சரணந்தாழ்ந்து நின் ஐயறு தம்பியோடு அளவளாவுதல் உய்திறம். (யுத் : 1306 [பா : பே]
2. கலந்து உரையாடுதல். ஆய அன்பினேடு அளவளாவுவார். (கி : 111)

அளவிடல் 1. அளாவுதல். தொடல். விண் அளவிட நிமிர்ந்துயர்ந்த மேனியர். (ஆ : 407)
2 அளத்தல். கண் அளவிடலரு மார்பர். எண் அளவிடலரும் செரு வென்றேறினர். (ஆ : 407)

அளவியல் – பெருமைதரக் கூடியது. மிக்க அளவினதான பெருஞ் செயல். (கலா) அன்னது துணிந்தா யென்றால் அளவியல் அன்று செய்தற் கடுப்பதேயாகுமன்றே. (யுத் : 3540)

அளவின்தலை –அளவில். தலை - ஏழனுருபு. அன்னுன்வருமளவின் தலை நிலைநின்றன அனிகம். (யுத் : 1849)

அளவு - 1. பொழுது. சமயம் இத்தன்மை எய்தும் அளவின் கண். (யுத் : 2195)
2. அளவிடல். எண்ணுக்கும் அளவிலாத அறிவினேர். (யுத்:2702)
3. குறிப்பிட்ட அளவு. எல்லை. (அண்)
4. பெருமை. (வை. மு) ஆழியான் அளவின் நாமம். (சு : 832)

அளவுதல் – ஒன்று கூடுதல். பதாகை ஈட்டமும் ஆணையின் கொடிகளும் அளவித் தோய்தலால். (யுத் : 1066)
2. வந்து சேர்தல். காலம் வந்தளவியது. (கி : 539)
3. அளவுதல்; தொடுதல். முட்டி வான்முகடு சென்றளவி. (கி : 193)
4. இணைதல். தளிரியல் பாகத்தான் தடக்கை ஆழியான் அளவி ஒன்ருவரேயன்றி. (கி : 211)
5. தெளித்தல். சீதப் பனிநீர் அளவித் திண்கால் உக்க மென் கால். (அ : 334)

அளவை - 1. அளக்கும் கருவி; அளவு கருவி. ஆங்கவன் செய்கையே அளவையாம் என. (சு: 1303) விண்ணுக்கும் அளவையாய மேரு (யுத்: 2702)
2. அறியும் வகை; தெரிந்துகொள்ளும் விதம். பித்தின்றி உணர்தியேல் அளவை பெய்குவன். (யுத்: 188)
3. பிரமாணங்கள். அளவையால் அளப்பரிது. (யுத்: 192)

அளறதெழுந்தன - சேருயின. (அது பகுதிப் பொருள் விகுதி) விரிகடல் அளறதெழுந்தன. (யுத்: 3473)

அளறு - சேறு. அளறுபட்டமுந்திய அளக்கர். (யுத்: 558) அளறுபட்டமுந்திய தானே. (யுத்: 2003)

அளறுபடல் - சேருதல். (யுத்: 558)

அளாவுதல் - 1. கூடுதல்; பொருந்துதல். புளி அளாங் தேறல். (யுத்: 2783) மஞ்சளாவிய மாணிக்கப் பாறை. (அ; 576)
2. கலத்தல். அகிலிடும் கொழும்புகை அளாய் மயங்கின. (பா: 128) வாளும் வேலும் விட்டு அளாயின அனைய கண் மயிலே. (அ: 738)

அளி - 1. வண்டுகள். அளிகள் ஆர்ப்ப. (பா: 798) மலர்வாய் அளி படர. (அ: 625)
2. இனிப்பு. வார் அளித்தழை மாப்பிடி வாயிடை நீரளிப்பது. (கி: 34)
3. அன்பு. அளிவரு மனத்தோர். (யுத்: 4258)
4 தொடர்பு பற்றிவரும் அன்பு. மாமுனி பெறுகென அளித்தனன் அளியால். (பா: 488)
5. இரக்கம். அளியத்தேன். (யுத்: 1623)
6. அருள். கருணை. தண்ணளியின் சாலபோல்வான். (பா: 215) உற்றுடைய பெருவரமும் உவந்துடைய தண்ணளியும். (யுத் 408)
7. ஆசை. அளியால் இவ்வூர் காணும் நலத்தால் அணைகின்றேன். (சு: 178)
8. பாணம். அளிமுற்றிய சோரி. (யுத்: 3463)

அளித்தகவு - கருணையாகிய நற்குணம். அளித்தகவில்லா ஆற்றலமைந்தவன் கொடுமை அஞ்சி. (யுத்: 915)

அளித்தல் - 1. காத்தல். விராவி அளித்தருள் மெய்ப்பொருள். (பா: 299) அளிக்கும் நாயகன் மாயை புக்கடங்கினனெனினும். (அ: 747) பார் அளிக்கும் மைந்தர். (பா: 262) தரை அளித்த தனி நேமித் தயரதன். (ஆ: 360)
2. அருள் செய்தல். அகலிகைக் களித்த தாளும். (பா: 152)
3. ஒத்தல். குன்று அளிக்கும் குலமணித்தோட் சம்பரன். (பா: 325) வரை அளித்த குலமாடநகர். (ஆ: 360)

4. வீசுதல். விரை அளித்த கான். (ஆ : 360)

5. சொல்லுதல். அன்னதற்கடியேன் செய்யும் பணி இனிது அளித்தி என்ருன். (பா : 210)

அளித்திரு – பாக்கியலட்சுமி. அருளான் வருஞ் செல்வம். (கலா) தலையளி செய்தலாகிய செல்வம். (அண்) (தலையளி-முகம் மலர்ந்தினிய கூறல்) சிறந்த நின் தண்ணளித் திருவைத் தேசழித் திறந்தனையாமெனின். (அ : 480)

அளிதல் – 1. கூடுதல்; கலத்தல். சிறியார்களோ டளிந்தபோது அறிதற்கெளிதாவரோ. (சு : 249)

2. கனிதல். அளிந்து அகத்தெரியுந் தீ. (கி : 655)

அளிபடர்தல் – வண்டுகள் வேறிடஞ் செல்லுதல். (அண்) (கலா) வண்டுகள் மேலே எழுந்து உலாவுதல். (வை மு) கால் பாய்வன முதுமேதிகள் மலர்வாய் அளிபடர. (அ : 625)

அளியத்தாய் – அருள் செய்யத்தக்கவனே. அந்தமிலா அன்பென் மேல் வைத்தாய் அளியத்தாய். (யுத் : 296)

அளியத்தேன் – 1. காக்கப்பட்ட யான். இரங்கத்தக்க யான். அன்பினல் அளியத்தேனுக்கு ஒழிவரும் உதவி செய்த உன்னை யான் ஒழிய வாழேன். (யுத் : 870)

2. பாத்திரமான எளியேன். இந்திரற்கும் தோலாத நன் மகனை ஈன்ருள் என்று அந்தரத்து வாழ்வாரும் ஏத்தும் அளியத்தேன். (யுத் : 1946)

அளியுறல் – ஆசைப்படுதல். அளியுற்ருல். (சு : 179)

அளியென் – எளியேன். அளியென் செய்த தீவினையே அன்றிலாகி வந்தாயோ. (பா : 631)

அளை – 1. பாம்புப்புற்று. அளைபுகும் அரவினெடு அலவன் வாழ்வுற. (பா : 286)

2. மலைக்குகை. அளையில் வாளரி அனையவன். (சு : 236)

அளைதல் – 1. தீண்டுதல். ஐயன் மேனியெலாம் அளைந்தால். (அ : 642)

2. கலந்தியலுதல். ஊனளைந்த உடல். (அ : 808)

3. அடைதல். வானளைந்து. (அ : 808)

4. பரவுதல். அளையொலி முரசினம். (யுத் : 4183)

5. துழாவுதல். உந்தையை முன் கொன்று உடலைப் பிளந்து அளைய. (யுத் : 296) உயிர் நேடுவேம்போல் உயிரளையக் கண்டும். (யுத் : 297)

**அளைந்துதழுவுதல்** – முழுதுங்கலந்து தழுவிநிற்றல். (வை.மு) கலந்து ஒழுங்குபெறத் தழுவி இயக்கல். (அண்) ஊனளைந்த உடற்குயிராமெனத் தானளைந்து தழுவின தண்ணுமை. (அ:808)

**அற்கண்டனைய மேனி** – இருளைக்கண்டாற்போன்ற மிகக்கரிய உடம்பு. அற்காணிற் கண்டனைய அழகமைந்த மேனியான். (அ: 1018)

**அற்கள்** – இருள் தொகுதிகள். அற்கள் ஓடும் நிறத்த அரக்கர். (யுத்: 984)

**அற்பு** – அன்பு. பொருப்பில் வாழும் அற்புடை உள்ளத்தார். (ஆ: 292)

**அற்புதம்** – அதிசயம் விளைவிப்பது. வியக்கத்தக்கது. இங்கிதன் அற்புதம் இன்னம் கேட்டியால். (அ: 377) அற்புதமாயை. (யுத்: 196)

**அற்புதர்** – அறிஞர். அற்புதரே அறியுந் தன் சிற்பதம் ஒப்பதொர் மெய். (பா: 440)

**அற்புதன்** – 1. அதிசயம் விளைவிப்பவன். அற்புதன் அற்புதரே அறியும் தன் சிற்பதம் ஒப்பதொர் மெய்கொடு சென்றான். (பா: 440)

2. இராமபிரான். அற்புதன் திருவைச் சேரும் அருமணம். (அ: 258)

**அற்றதாகிய** – அப்படிப்பட்ட. அற்றதாகிய செருப் புரிவுறும் அளவினில். (கி: 189)

**அற்றம்** 1. இல்லாத சமயம். அருந்தவன் தந்தையை அற்றம் நோக்கியே. (பா: 220)

2. ஏற்றபொழுது. அற்றம் நோக்கி நிற்கின்ற வாளெயிற்றரக்கர். (சு: 1035)

3. பிரிவு. பிரிந்த சமயம். மையலால் அறிவு நீங்கி மாமுனிக்கு அற்றஞ்செய்து. (பா: 552)

4. குறை. அழுதனள் சிரித்தனள் அற்றஞ் சொல்லினள். (பா: 1099)

5. பொய். அற்றம் நீத்த மனத்தினன். (அண்) (வை. மு) (அ: 654)

6. குற்றம். (கலா) அற்றம் நீத்த மனத்தினன். (அ: 654)

7. இரகசியம். அற்றந்தான் மனங்கள்போல முகமும் மறைக்குமே. (பா: 1176)

8. துன்பம். அற்றங்காத் தளிப்பாரினி இம்மன்னுயிர்க்கு இராமனிற் சிறந்தவரில்லை. (அ: 41)

9. அழிவு. காலம் ஒர்ந்து அற்றம் நோக்கி இராவணன் உயிர்மேல் உய்த்த திகிரியும் என்னலானான். (ஆ: 667)

10. ஆபத்து. அருமைந்தற்ற மகற்றும் வில்லியார். (கி : 405)
11. அவமானம். மானக் குறைவு. காத்தன கூந்தற் கற்றை அற்றம். (யுத் : 2781)
12. சோர்வு. (கலா) (அ : 654) வருந்தின அற்றம் பார்த்து. (யுத் : 2895)
13. இடையிடு. அற்றம் ஒன்று பெற்று இவன் ஏகினன். (கி : 143)

**அற்ற வல்ல** - அற்றுப்போயின அல்லாதன; அருது நிற்பன. அற்ற வல்லவுங் கண்டிலர் படைக்கலம். (யுத் : 1538)

**அற்றன அற்றன** - ஓடிந்தன ; ஓடிந்தன. பிண்டிபாலம் அற்றன அற்றன பகழி. ஆ : 444)

**அற்றிரள்மேனி** - இருள் திரண்டால் ஒத்த மேனி. அரத்த நோக்கினர் அற்றிரள் மேனியர். (பா : 853)

**அற்று** - 1. அன்று. (கலா) அந்நாளில். (உ.வி) அற்றதிகாயன் யாக்கை. (யுத்: 2180)
2. அது. (சுட்டு) அற்றவன் உரைத்தலோடும். (ஆ: 622)
3. அவ்வாறு. அற்றவன் உரைத்த லோடும். (யுத்: 1413)

**அற்றைநாள்** - அந்தப்பழங்காலம். அற்றை நாள் முதல் யானுள நாள் வரை. (யுத் : 177) [பா : பே]

**அற்றெுடுத்தன்னகுஞ்சி** - இருளை இணைத்தாற்போன்ற குழற் கற்றை. அற்றெுடுத்தன்ன குஞ்சியன். (அ : 649)

**அறங்கடத்தல்** - தருமநெறி தவறுதல். உம்பி அறங்கடக்கி லான். (கி : 987)

**அறங்குணித்தல்** - அறத்தைப் பெருக்குதல். அறங்குணித்த மேலோர். (அ : 8)

**அறங்கொள் கொம்பு** - தருமமாகிய கொடியைப்பற்றிக் கொள் ளும் கொம்பு. சீதாபிராட்டி. (சு : 1098)

**அறச்சான்று** - அறச்சாட்சி. உந்தை என் துணைவனன்றே ஓங் கறஞ் சான்று முண்டால். (யுத் : 944) [பா : பே]

**அறத்தகையரசன்** - அறமாகிய பெருமைவாய்ந்த அரசன். திருமால். அறத்தகை யரசன் திண்போர் ஆழி. (சு : 30)

**அறத்தவர்** - இல்லறத்தார். அறத்தவரை அண்முப் விருந்துமென லாகியது வாழி மணியாழி. (சு : 560)

**அறத்தாறு** - அறநெறி. தரும மார்க்கம். அறத்தா றழிவுளதா மென. (யுத் 3032)

**அறத்திறம்** - அறநெறியின் கூறுபாடு. அறநெறியின் தன்மை. அறத்திறனழியச் செய்யான். (கி : 355)

**அறத்தின்நாயகன்** - தருமத்துக்குத் தலைவனான இராமபிரான். (சு : 639)

**அறத்தின்மூர்த்தி** - தரும மூர்த்தியாகிய திருமால். அறத்தின் மூர்த்தி வந் தவதரித்தான் என்பதல்லால் (அ : 37)

**அறத்துரை** - அறநெறிபற்றிய மொழிகள். என்று அறத்துரை கேட்டலும். (சு : 466)

**அறத்துளோர்** - அறநெறியில் நிற்பவர். நீ யன்றி யாவரே அறத் துளோர். (ஆ : 1262)

**அறத்துறை** - தரும மார்க்கம். என்று அறத்துறை கூறலும். (சு : 466) [பா : பே]

**அறத்தெல்லை** - தருமத்தின் வரம்பு. நீ அறத்தெல்லை கடத்தியோ. (சு : 1142)

**அறந்தருதவம்** - தருமத்தை விளக்கவல்ல பொறுமையாகிய தவம். அறந்தரு தவத்தை ஆயும் அறிவினால். (யுத் : 926)

**அறந்தலைநிரம்பத் துறத்தல்** - அறம் தலைநிரம்புமாறு துறத் தல். இல்லறம் புரிந்தபின் துறவு மார்க்கத்தை மேற்கொள்ளல். அறந்தலை நிரம்ப மூப்படைந்தபின்னரும் துறந்திலன். (அ : 28)

**அறந்தலைநிற்றல்** - தருமத்தை மேற்கொண்டு அவ்வழியே ஒழுகல். ஆய்வுறு மனத்தேனாகி அறந்தலை நிற்பதானேன். (ஆ : 265)

**அறந்திறம்பல்** - தரும மார்க்கத்தினின்றும் மாறுதல். அறந் திறம் பல் அருங்கடி மங்கையர் திறந்திறம்பல். (கி : 335)

**அறந்தின்னுதல்** - அறத்தை அடியோடு விழுங்குதல், தரும காரியத்தைக் கெடுத்தல். அறத்தை அருளோடும் தின்றுள் ஒருத்தி இவள். (சு : 79)

**அறப்பள்ளி** - அறச்சாலை. தரும சத்திரங்கள். பொழிலும் அல நல்லறப்பள்ளி மன்னோ. (பா : 164)

**அறம்** - 1 அறநூல். அறந்துணித்தமேலோர். (அ : 8)
2. நோன்பு. அறத்தினின் றேக லென்பது அரிதென்றும் எண்ணி னான். (அ : 970)
3. அறக் கடவுள். அறமுஞ் சிறுமால். (யுத் : 382)
4. தருமம். நீ இந்த உலகின் அரந்தையாம் பகைதுடைத்து அறம் நிறுத்தினை ஐய. (யுத் : 4047)

**அறம்நிறுத்தல்** - தருமத்தை நிலைபெறச் செய்தல். (யுத் : 4047)

**அறம்புரத்தல்** - தருமத்தை காத்தல். அரக்கரை ஆசறக் கொன்று நல்லறம் புரக்க வந்தனம். (யுத் : 375)

**அறம்வளர்த்தல்** - அறம் ஓங்குமாறு செய்தல். அறம் வளர்த் தொருவனைய் நெறியினின்றான். (யுத் : 96)

அறமறுத்தான் - அறத்தை மறுத்தவனான இராவணன். வாங்குஞ் சரம் வாங்காவகை அறுத்தான் அறம் மறுத்தான். (யுத் : 1121)

அறமார்பள்ளி - தவச்சாலை; அறவொழுக்கம் நிரம்புதற்குரிய இடம். அருந்தவனும் அறமார் பள்ளியது சேர்ந்தான். (அ : 608)

அறமூர்த்தி - தரும தேவதை. நல்லற மூர்த்திதானும் வழுவலில் மறையும் வாழ்ந்தன. (யுத் : 2678)

அறல் - 1. கருமணல். அறற் கூந்தல். (பா : 478) அறலியற் கூந்தல். (பா : 876)

2. மயிரின் நெரிப்பு. (அடர்த்தி) அளியன்னதொர் அறல் துன்னிய குழலாள். (அ : 619)

அறவன் - தருமமூர்த்தி. (அனுமன்) அறவன் ஆர்த்தெழும் ஓதையும். (அ : 720)

அறவோர் - தரும சுவரூபிகளாகிய இராமலக்குமணர். அன்னையே அனைய அன்பின் அறவோர் தமைவிட்டு என்னையே நுகர்தி. (ஆ : 40)

அறன் - 1. தரும தேவதை. இராவணன் தீமைச் செல்வம் அழிந்த தென் றறனும் தன்வாய் ஆவலங்கொட்டிட்டன்றே. (யுத் : 456)

2. முறைமையான காரியம். அறனும் அஃதே நீதியும் அஃதே என்றான். (யுத் : 921)

அறனல்லது அல்லது மாறு அறியான் - அறனல்லாதது அன்றி வேறொன்று அறியான். (யுத் : 1741)

அறிஞர் - ஞானிகள். முனிவர். பின் அறிஞர் காதற்கு அமை விருந் தாயினான். (அ : 643)

அறிஞரின் அறிஞன் - அறிவுடையோர்களில் அறிவுடையவன். மேதாவிகட் கெல்லாம் மேதாவி. (பிரகலாதன்) ஆயவன் தனக்கு அருமகன் அறிஞரின் அறிஞன். (யுத் : 149)

அறித்தக்கார் - அறியத்தக்கார் என்பது குறுகி நின்றது. (யுத் : 3911)

அறிதல் - உணர்தல். அன்றெனின் அறிகுவம். (யுத் : 171) வன்மை அறிகுவர் எவரும். (யுத் : 1418) ஆர் அனார் உலகியற்கை அறித்தக்கார். (யுத் : 3911) அறிதல் தேற்றும். (ஆ : 1042) அறிதலாகும் சிறிதின். (ஆ : 264) அனையவன் யாரென அறிதி யாதியேல். (சு : 1117) ஆரணம் அறிதல் தேற்றா ஐயன். (அ : 275)

அறிதல் தேற்றும் - அறியோம். தெளிய அறிந்திலோம். உள்ளத் தெண்ணியது அறிதல் தேற்றும். (ஆ : 1042)

அறிவன் - ஞானவானான கோசிகன். ஞானமுனி. அவ்வுரை இராமன் கூற அறிவனும் அவனை நோக்கி. (பா : 551) (பா : 774)

**அறிவித்தல்** – உணருமாறு செய்தல். என்னை இன்னல் அறிவித்தீர். (யுத் : 1592)

**அறிவிலி** – அறிவில்லாத ஒருவர். மதியிலி. (மந்தரை) ஆதலின் அறிவிலி அடங்குதி என்றாள். (அ : 164)

**அறிவின் உம்பரான்** – யாவர் அறிவையுங் கடந்து நின்றவன். (இராமபிரான்) அருகு சார்ந்தனன் அறிவின் உம்பரான். (பா : 333)

**அறிவினர்** – நல்லறிவு. யாவன் நீ யாவதென்று அறிவினர் அருளினர். (கி : 360)

**அறிவினுக்கறிவு** – 1. அறிவுக்கு அறியப்படும் பொருள். (வை.மு) அறிவுக்கு அறிவாய் விளங்குபவர். (அண்) ஆதிநாதர் எம் அறிவினுக்குக் கறிவரோ. (ஆ : 1)

2. எல்லாப் பொருளையும் அறிகின்ற அறிவுக்கும் ஓர் அறிவை ஒத்தவன். (வை.மு) அறிவுக்கு அறிவானவன். (அண்) அறிவுக்கு அறிவாயுள்ள பரம்பொருளாகிய கடவுள். ஆரணங் காட்ட மாட்டா அறிவினுக் கறிவும் அன்னேன். (சு : 1121)

**அறிவு** – பேரறிவு. தத்துவஞானம். மெய்யுணர்வு. நாயடியேன் ஆவிபோம் வேலைவாய் அறிவு தந்தருளினாய். (கி : 358)

**அறிவுறுத்தல்** – தெரிவித்தல். நானுனக் கறிவுறுத்துவென் கேள். (பா : 654)

**அறிவை நோக்கினான்.** – நல்லறிவை வளர்த்துக் கொள்ளும் கருத்துடைய இராமபிரான். அந்தியை நோக்கினான் அறிவை நோக்கினான். (அ : 777)

**அறுகுதூவல்** – அறுகம்புல் முதலிய தூவுதல். மங்கல மரபுகளில் ஒன்று. தையலார் அறுகுதூவி வாழ்த்தினர். (யுத்: 2158)

**அறுகுநீர்** – அறுகம்புல் இட்டுவைத்த கலச நீர். அறுகுநீர் தெளித்து வாழ்த்தி. (பா : 889)

**அறுகுறை** – தலையற்ற உடல். கவந்தம். அறுபட்ட உடல் ஆடுவதுண்டு. ஆடுகின்றன அறுகுறை. (ஆ: 448)

**அறுசுவை** – 1. அறுசுவையோடு கூடிய உண்டி. அறுசுவை அமைக்கும் வேலை. (யுத்: 4121)

2. ஆறுசுவைகள். அறுசுவைத்தாய உண்டி. (பா: 657)

**அறுத்தல்** – 1. எய்தல். அறுத்தாய் கணையால் எனவே. ஆ : 378)

2. ஒழித்தல்; போக்குதல். செறுத்துவந்த தீதெலாம் அறுத்த உன்னை. (ஆ : 71) தெவ்வினை அறுத்து. (யுத் : 42)

அறுதல் - 1. நீங்குதல். ஆசை அருன். (யுத் : 962)
2, அறுபடல். முடித்தலை அற்றபோதன்றி ஆசையருன். (யுத் : 962)
3. முடிதல். ஆண்டு பத்தொடு நாலு மின்ருேடறு மாயின் மாண்டதா மினி என் குலம். (யுத் : 4062)

அறுதலைக்குறை - தலையற்ற உடல். ஓர் திருவனுள் ஆட்டிநின் றயர்வதோர் அறுதலைக் குறையினைக் கூட்டிநின்று. (சு : 975)

அறுதி - முடியுங்காலம். ஆண்டகைக் கின்று அறுதி என்ருரரோ. (யுத் : 4131) அறுதியை யடைந் தப்பருவம் மாண்டுபோய். (கி : 546)

அறுபத்தே ழமைந்த கோடி - அறுபத்தேழு கோடிக்கணக்கு. அறுபத்தேழமைந்தகோடி வானரத்தலைவர். (யுத் : 4283)

அறுபதம் - ஆறுகால்களையுடையது. வண்டு ; குளவி. அஞ்சிறை அறுபதம். (ஆ : 492)

அறுபதின் முதலிடை நாலொழி ஆயிரம் - ஐம்பத்தாருயிரம். அறுபது என்பதில் பின்வாங்கிய நான்கு என்ற எண்ணை ஒழித்த ஆயிரம்; அதாவது ஐம்பத்தாருயிரம். அறுபதின் முதலிடை நாலொழி ஆயிரம் இறுதிய மதகரி இறுதலும். (யுத் : 1814)

அறுபதினுயிரர் - அறுபதினுயிரம்பேர். அறுபதினுயிரரெனினும் ஆண்டகைக்கு உறுதியில் ஒன்றிவர்க் குணர்வென்றுன்னலாம். (அ : 11)

அறுவர் - 1. அற்றுப் போகுபவர். அழிந்து போனவர். அசட்டர்கள் ஐவரை அறுவராக்கிய வசிட்டன். (பா : 256)
2. ஆறு பேர். பின் குன்று சூழ்வான் மகனெடும் அறுவரானேம். (யுத் : 452)

அறை - சிறுவீடு. அறையும் ஆடரங்கும். (பா : 9)

அறை அரவக்கழல் - ஒலிக்கின்ற ஒலியையுடைய வீரக்கழல். அறை அரவக் கழல் மாருதி. (யுத் : 2821)

அறை கழல் - ஒலிக்கின்ற வீரக்கழல். அறைகழற்சிலைக் குன்றவர். (அ : 758)

அறை கூவல் - போருக்கு அழைத்தல். மற்றெருருத்தன் வலிந்தறை கூவ. (கி : 323)

அறைதல் - 1. சொல்லுதல். ஆசைபற்றி அறையலுற்றேன். (பா : 14)
2. துண்டங்களாக வெட்டுதல். அறுத்தல். அறையும் மென் கரும்பு ஆடிய அமுதம். (பா : 544)

3. மோதுதல். சிதறுதல். உனக்கமைந்தன மாருதம் அறைந்த பூளை ஆயின கண்டனை. (யுத் : 1218)

4. அடித்தல். எறிதலோடு அறைதல் வேட்ட இடவன். (யுத் : 2008)

அறைமணி – மாறி மாறி ஒலிக்கின்ற மணி. யானைமேற் பறை சாலீட்டத்து அறைமணி ஆர்த்த. (யுத் : 2398)

அன்பத்துக்கு – அன்புக்கு. அன்பத்துக்கு எல்லையுண்டோ. (அ : 1035)

அன்பழிசிந்தை – 1. அன்பினால் அழிந்து கிடக்கின்ற நினைவு. (யுத் : 908)

2. அன்பில்லாத மனம். அன்பழி சிந்தையராய ஆடவர். (க : 504)

அன்பு – 1. காமம். அன்பெனும் விடமுண்டாரை ஆற்றலாம் மருந்து முண்டோ. (ஆ : 659)

2. தொடர்புடையார் மாட்டு உண்டாகும் பற்று. முன்பு பின் பின்றி மூவுலகத்தினும் அன்பின் அல்லதோர் ஆக்கமுண்டாங் கொலோ. (அ : 113)

3. நேசம். அன்பிற் சிறந்தாயதொர் பூசனை யார்கண் உண்டே. (சு: 61) அன்பென்ப தொன்றின் தன்மை அமரரும் அறிந்ததன் றால். (யுத்: 2659)

அன்பு மாட்டுதல் – அன்பை நிலைபெறுத்திக் காண்பித்தல். எம்பிமேல் அன்பு மாட்டலால். (யுத் : 2768)

அன்வயம் – 1. பொருத்தம். பொருள். (கலா) நன்மருந்துதவும் என்றுரைத்த நல்லுரைக்கு அன்வயமில்லை. (யுத் : 2747)

2. மரபு. குலம். நீ நின் அன்வயம் ஏதும் அறிந்திலை ஐயா. (யுத்: 2829)

அன்வயித்தல் – சார்தல். அறந் தொடர்ந்திலோரை அன்வயித் தோரும். (யுத்: 266)

அன்றியும் – அல்லாமலும். அன்றியும் பிறிதுள்ள தொன்று. (சு: 620) (பா: 362)

அன்றில் – அன்றிற்பறவை. பேழ்வாய் அன்றில். (யுத்: 2404) அன்றிலம் பெடை. (யுத்: 1617) அன்றிலாகி வந்தாயோ. (பா:631)

அன்றில் தீவு – கிரௌஞ்சத்தீவு. அன்றிற் றீவினில் உறைபவர் இவர். (யுத்: 3218)

அன்றிலின் உருவதாய அணி – கிரௌஞ்ச வியூகம். பேழ்வாய் அன்றிலின் உருவதாய அணிவகுத் தமைந்து நின்றான். (யுத்:2404)

அன்று – 1. பகை. அன்றின பிரிவொல்லா. (அ : 699)

2. அசை. உலகத்தே ஒருத்தியன்றே. (அ : 1061)

3. அப்பொழுது. தாயருக்கு அன்று சார்ந்த கன்றெனும் தகைய ஞனன். (யுத் : 4257) அன்றவன் வந்ததறிந்து. (பா : 441)

**அன்றுதல்** - சீறுதல். சினத்தல். அன்றவாலி (அன்று அ வாலி) (உ. வி) (கி : 328) ஆலவிடம் அன்றிவர நின்ற சிவன். (யுத் : 846)

**அன்றே** - 1. அன்று ஏ. அசைநிலை. ஆவம் வந்தடைந்ததன்றே. (கி : 389) பா : 167)

2. தோற்றம். அனந்தகோடி மேருவும் விண்ணும் மண்ணும் கடல்களும் வேண்டுமன்றே. (யுத் : 1238)

**அன்றேல்** - இல்லையேல். அன்றேல் வசைத்திறம் நின்வயின் வைத்து மாள்வென். (அ : 204)

**அன்ன** - 1. அப்படிப்பட்ட; அத்தன்மைவாய்ந்த. அன்ன தம்பியும் தானும். (பா : 337) அன்னமாலையை. (பா : 483)

2. உவமஉருபு. பூளைவீ அன்னதன் அங்கம் வெந்து. (பா : 342)

**அன்ன ஊர்தி** - பிரமன். அன்னப்பறவையை வாகனமாகவுடையவன். அன்ன ஊர்தியை முதலாம் அந்தணர்மாட்டு அருந்தெய்வம். (ஆ : 56)

**அன்னக்கன்னி** - அன்னப்பேடை. அன்னக்கன்னிக் காடையளிப்பான் அமைவாளும். (பா : 1003)

**அன்னதானம்** - அன்னம் அளித்தல். அந்தணர்க்கு அன்னதானமும் ஆடையும் நல்கினுள். (அ : 96)

**அன்னப்பேடை** - பெண் அன்னம். அன்னப்பேடை சிறையில தாய்க் கரைதுன்னிற் றென்னவும். (அ : 1062)

**அன்னம்** - 1. சோறு. அன்னதானம். அன்னதானமும் ஆடையும் நல்கினுள். (அ : 96)

2. அன்னப்புள். அன்னமென்னடையவள். (பா : 624) (சு : 246) (கி : 483) அன்னமென்னடை யணங்கு. (பா : 1288)

**அன்னர்** - அத்தன்மையர். அன்னராயினும். (அ : 23)

**அன்னவள்** - அத்தகையவள். அன்னவளை அல்லள் என ஆம்என. (பா : 1231)

**அன்னவன்** - 1. அவன். அன்னவற்றெழுதலும். (பா : 223)

2. அத்தகையவன். அன்னவன் மகவிலாது அயருஞ் சிந்தையான். (பா : 368) (பா : 430)

**அன்னவிழாவணி** - அன்னம் புடைக்கும் விழாவின் முறை. (அண்) அன்னம் படைத்தலாகிய விழாவின் சிறப்பு. (வை. மு) சோறிடும் விழா. (கலா) விருந்தினர் முகங்கண் டன்ன விழாவணி விரும்புவாரும். (பா : 46)

**அன்னள்** - அவள். அத்தகையவள். அன்னள் தாளிணை வணங்கி நின்று. (பா : 483)

**அன்ன** - அன்ன. அத்தன்மையான. எதுகை நோக்கி நீண்டது. அன்ன பலவும் பன்னி அழும். (ஆ : 999)

**அன்னன்** – அவன். அன்னன் பேர் என்பான். (பா : 435)

**அன்னை** – தாய். அன்னையே அறம் பார்க்கிலையாம். (அ : 315) அன்னையே அனையாட்கு. (பா : 550)

**அன்னே** – தாய் போன்றவளே. அன்னே தேனே ஆரமுதே யென்றடி போற்றி. (பா : 593)

**அன்னேயோ அன்னேயோ** – இரக்கக்குறிப்பு. அன்றி துயரத்தால் தாயை நினைந்து விளித்தாகவும் ஆம். அன்னேயோ அன்னேயோ ஆ கொடியேற்கு அடுத்தவா. (யுத் : 3905)

**அன்னோர்** – அவர்கள், அன்னோர் கேளொடு மடியுமாறும். (ஆ : 871)

**அனகம்** – பாவமின்மை. குற்றமில்லாமை. அனகமா நெறி. (ஆ : 850)

**அனகமா நெறி** – பாவமற்ற சிறந்த நெறி. (ஆ : 850)

**அனகர்** – ஆடவர். அனகரும் அணங்கனரும். (பா : 1014)

**அனகன்** – 1. குற்றமற்றவன். இராமபிரான். அனகன் இங்கர் எய்தியது. (பா : 1174)

2. தூயோன். அனகன் அங்கணன் ஆயிரம் பெயருடை அமலன். (அ : 737)

**அனங்க சாபம்** – மன்மதனது வில். இரண்டில்லை அனங்க சாபம். (கி: 798)

**அனங்கம்** – சரீரத்தை இழந்த நிலை. அனங்க வசந்தன் முகங் கெட. (சு : 716)

**அனங்க வாளி** - மாரன் அம்பு. (யுத் : 1590)

**அனங்கவேள்** - மன்மதன். (பா : 669)

**அனங்கன்** – உருவிலி. மன்மதன். (பா : 342)

**அனசனம்** – உண்ணாமை. அனந்தன் அவ்வாழ்விழந்து அனசனத்தொழில் மேற்கொள்வதாயினன். (யுத் : 1009)

**அனசூயை** – அத்திரி முனிவரின் மனையாள். அழுக்காறு அற்றவள் என்று பொருள்படும். அசூயை - அழுக்காறு. அவன் அரும் பன்னி கற்பின் அனசூயை. (ஆ : 5)

அனந்தகோடி - பல கோடிகள். உருமுறை அனந்தகோடி உதிர்ந்தன. (யுத் : 2377) (யுத் : 1238)

அனந்தம் - எல்லையற்றன. அண்டம் அனந்தமாக. (சு: 71) குரங்கும் அனந்தமே. (யுத் : 1009)

அனந்தர் - 1. நித்திரை. அனந்தரின் நெடுங்கண். (ஆ : 683) அனந்தரும் தீர்ந்து. (யுத் : 1367)

2. யோக நித்திரை. ஆழி நின்று அனந்தர் நீங்கி. (யுத் : 2870)

அனந்தல் - நித்திரை. (அண்) தூக்க மயக்கம். (கலா) இரவி இளங்கரத்தால் அடிவருடி அனந்தல் தீர்ப்ப. (பா : 717)

அனந்தன் - ஆதிசேடன். (என்றும் அழிவில்லாதவன்) அவ் வனந்தன் படங்கிழிதர. (ஆ : 531)

அனல் - 1. காலாக்கினி, அண்டமும் அகிலமும் அடைய அன்று அனலிடைப்பண்டு வெந்தன, (கி : 179)

2. எரி. நெருப்பு. ஆங்கவ் வாசகம் என்னும் அனல். (அ : 304)

3. விடம். வரிகொள் நாகம் வயங்கனல் உமிழும் வாய (சு : 4)

அனல் பொதுளல் - நெருப்பு நெருங்குதல். புகையொடு சிகை யனல் பொதுளியதால். (யுத் : 3093)

அனல்மடுத்தல் - தீஇடுதல். தீயில் இடுதல். எம்மூர் அனல் மடுத்து. (யுத் : 1409)

அனல் விழித்தல் - நெருப்பெழ விழித்தல். அற்றவன் உரைத்த லோடும் அனல் விழித்து. (யுத் : 1413)

அனல்வேள்வி - தீயையுடைய யாகம். வயங்கனல் வேள்வி. (யுத் : 3518)

அனலம்படை - நெருப்பு அம்பு. அக்கினேயாஸ்திரம். அண்ணற் கரியான் அனலம்படை. (யுத் : 2910)

அனலன் - விபீடணன் மந்திரியரில் ஒருவன். அனலனும் அனிலனும் அரன் சம்பாதியும். (யுத் : 320)

அனலி - அக்கினி. அந்தணர் உறையுளை அனலியூட்டினேன். (அ : 896)

அனலி ஊட்டல் - தீக்கொளுத்தல். அனலியூட்டினேன். (அ : 896)

அனலியின் பகழி - அக்கினேயாஸ்திரம். கொள்ளியிற் சுடர் அனலியின் பகழி. (யுத் : 2582)

**அனற்படுகையன்** - எரிவளருங் கையையுடையவன். விஞ்சை கற்பது ஓர் நாவன் அனற்படுகையன். (பா : 440)

**அனற்பொறி** - தீப்பொறி. அனற்பொறி அசனியென்னப் பிதிர்ந் தனமலையும். (யுத் : 2045)

**அனற்றுறை** - அக்கினி காரியம். வேள்வித்தீ. அனற்றுறை முற்றி. (பா : 678)

**அனுயம்** - அநியாயம். (வெ. ப) வீண். (கலா) ஆதலால் உளதாம் ஆவி அனுயமே உகுத்தென் ஐய. (யுத் : 1359)

**அனுர்** - அவர். அன்னுர். ஆர் அனுர் உலகியற்கை அறித்தக்கார். (யுத் : 3911)

**அனிகம்** – 1. சேனை. அறுசுவைத்தாய உண்டி அரசநின் அனிகத் தோடும் பெறுகென அளித்து. (பா : 657)

2. அணிவகுப்பு. அனிகவெஞ்சேனை. (யுத் : 4120)

3. கூட்டம். அரிகளின் அனிகம். (ஆ: 397)

**அனிகராசி** – சேனையின் கூட்டம். காணமூண்டெழும் ஆசையின் நிமிர்ந்தது அவ்வனிக ராசியே. (அ : 960)

**அனிகவேலை** – படைக்கடல். இவ்வனிக வேலையை ... வென்று. (அ : 1106)

**அனிலன்** – 1. வாயுதேவன். அனிலன் சண்டவேகமும் குறைதர. (யுத் : 4068)

2. விபீடணன் மந்திரியரில் ஒருவன். அனலனும் அனிலனும். (யுத் : 320)

**அனீகம்** – சேனைவகுப்பு. நின் ஆழியன்ன அனீகத் தலைமகன் பூழியான். (யுத : 1045) அவனுடை அனீகமெல்லாம் கூறு கூறுக்கி. (யுத் 1871)

**அனீகவெள்ளம்** - 1. சேனைகளின் பெருக்கு. அமரர் நாடிழிந்த தென்னப் பொலிந்த தவ்வனீக வெள்ளம். (பா : 925)

2. அனிகத் தொகுதி. மற்று அரிகளின் அனிகமேயென. (ஆ : 397)

**அனீகர்** – சேனையிலுள்ளவர். ஆறுபத்தெழுகோடி அனீகருக்கு. (கி: 746)

**அனுக்கம்** – 1. வருத்தம். துயரம். மனம் அனுக்கம்விட. (அ: 237)

2. அயர்ச்சி. தளர்ச்சி. புந்தியில் அனுக்கந் தீர்ப்பான். (யுத் : 2159)

அனுங்குதல் - 1. வருந்துதல்; மனம்நோதல். உள்ளம் நொந் தனுங்கி. (அ : 942) விஞ்சு குளிர்ப் பல்லவம் அனுங்க. (ஆ : 253) வான் அனுக்க. (சு : 80)

2. பின்வாங்குதல். திசைக்கும் சிறிதனுங்கா உயர்தோள் பல உடையாய். (யுத் : 1127)

3. உலேதல். விண்டொட எடுத்தனன் உலகெலாம் அனுங்க. (யுத் : 514)

4. நிலேகெடல். விசையாலனுங்க வடமேரு. (யுத் : 2196)

அனுச்சை - இசைவு. நற்றவர் அனுச்சைகொடு நன்மனே புகுந் தார். (பா : 1243)

அனுசர் - தம்பியர். (பா : 197) [பா : பே]

அனுசன் - தம்பி. (பா : 197) அஞ்சன வண்ணனுக்கு அனுசன் கூறுமால். (கி : 675)

அனுதினம் - நாடோறும். (பாயி : 20)

அனுமன் - மாருதி. (கி : 723) அனுமன் தாதை. (யுத் : 478)

அனுமான் - (யுத் 1832)

அனே - அனல். நெருப்பு. அனல் என்பது அனே எனத் திரிந்த தென்பர், அனேயின் துறை ஐம்பதொடைம்பது நூல்வினேயின் தொகை வேள்வி நிரம்பிய மாமுனேவன். (ஆ : 78)

அனேத்தில் - அவற்றுள். அனேத்தில் அங்கொன்ருயினும் ஆகுக. (யுத் : 4137)

அனேய - 1. அந்த. அனேய கானம். (பா : 474)
2. ஒத்த. வருந்தலில் மானமா அனேய மாட்சியர். (சு : 507)

அனேயதாக - அத்தன்மையாகுக. செவ்வியோய் அனேயதாக. (கி : 353)

அனேயர் - அத்தகையவர். அனேயர் அப்புனலேறினர். (அ : 727)

அனேயவர் - அவர்கள். அனேயவர் வைகினர். (பா : 646) அந்த இராமலக்குமணர். அனேயவர் சீற்றந்தீர்வர். (யுத : 3979)

அனேயன - ஒத்துவிளங்குவன. ஒப்பன. பிறங்கெருத்து அனே யன. (சு : 533) [பா : பே]

அனேயாள் - அவள். (பா : 483) (பா : 591)

அனேவீரும் - எல்லீரும். நின்ற அமரர் அனேவீரும் சேர்ந்து இவ னுக்கு ஒன்று பெருமை புரிகென்ருன். (யுத் : 304)



## கம்பர் வெளியீடுகள்

கம்ப ராமாயணம் அருஞ் சொல்லகராதி இருபதினாயிரத்துக்கு மேற்பட்ட சொற்களைக் கொண்டது. சுமார் 1400 பக்கங்களில் நான்கு பாகங்களாக வெளியிடப்படும். முதலாம் பாகம் அ-ஔ, ஏப்ரல் 1968இல் வெளிவரும். ஏனைய பாகங்கள் கூடிய சீக்கிரம் வெளிவரும்.

தவிர, கம்ப ராமாயணம் முழுவதற்கும் ஒரு விரிவான பொருளகராதியும் ஆயத்தமாகி வருகிறது. அந் நூல் அடுத்தபடி வெளிவரும்.

---

## KAMBAR PUBLICATIONS

**Kamba Ramayanam Glossary** consisting of over 20,000 words and phrases, covering about 1400 pages is to be published in four Volumes. The first Volume அ-ஔ, will be ready by April 1968. The other Volumes will be published soon.

A Comprehensive subject-Index of the whole of Kamba Ramayanam is also under preparation. This will be published in due course.

---

# KAMBA RAMAYANAM
## GLOSSARY

Specimen pages 1-76 Consisting of words with the initial letter அ.

*Compiled and Published*

*by*

A. S. SUNDARARAJAN, B. A.,
*[Formerly of Ramanathan College, Chunnakam, Ceylon]*
73-A, East Car Street,
CHIDAMBARAM, SOUTH INDIA.

December 1967.